# அன்பு நிலைய நூல்கள்

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருக்குறளின்பம் (4-ஆம் பதிப்பு) | 3 | 0 |
| இளிச்சவாயன் (ஹ்யூகோவின் பிரெஞ்சு நாவல்) | 3 | 0 |
| குண்டலகேசி நாடகம் | 0 | 12 |
| குண்டலகேசி அகவல் | 0 | 4 |
| இன்பமாலை (3-ஆம் பதிப்பு) | 1 | 0 |
| நாடகமணி மோலியர் | 0 | 13 |
| அற்புதப் பெண்மணி (மேரி கூரி) | 1 | 0 |
| முருகன் வழிபாடு | 0 | 4 |
| ஸ்ரீ சங்கர விஜயம் | 0 | 5 |
| சாது ஜவானி | 0 | 6 |
| சுவாமி இராம தீர்த்தர் | 0 | 2 |
| சதாசிவ ப்ரம்மம் | 0 | 2 |
| விட்மனின் "எனது பாடல்!" | 0 | 1½ |
| காவடிச்சிந்து அண்ணாமலை ரெட்டியார் | 0 | 2½ |
| முத்துத் தாண்டவர் | 0 | 2 |
| பொது நெறி | 0 | 2 |
| இனிய தமிழ் இலக்கணம் | 3 | 4 |
| பைந்தமிழ்ச் சோலை (3-ஆம் பதிப்பு) | 0 | 8 |
| திருக்காட்சி (2-ஆம் பதிப்பு) | 0 | 6 |
| குழந்தை இன்பம் (3-ஆம் பதிப்பு) | 0 | 6 |
| பராசக்தி அர்ச்சனை (2-ஆம் பதிப்பு) | 0 | 3 |
| சிலம்புச் செல்வம் (2-ஆம் பதிப்பு) (அசசில்) | ... | |
| நவரஸ நடனம் (அச்சில்) | ... | |
| தமிழிசை முழக்கம் (அச்சில்) | ... | |
| கலிமாவின் காதல் முதலிய கதைகள் (அச்சில்) | ... | |


அன்பு நிலையம்

இராமச்சந்திரபுரம் (Post)

திருச்சி ஜில்லா (S. I. Ry.)

# MARIE & PIERRE CURIE

## THE GREAT FRENCH SCIENTISTS

AND

THE DISCOVERY OF RADIUM

கமர்ஷியல் பிரின்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ், ஜி. டி., மதராஸ்.

## பதிப்புரை

"அற்புதப் பெண்மணி" என்ற இந்நூலில், ரேடியம் கண்டுபிடித்து உலகப் புகழ் பெற்ற ஃபிரெஞ்சு விஞ்ஞானிகளான கூரி தம்பதிகளின் (Marie & Pierre Curie) வரலாற்றைத் தருகிறோம். நமது நாட்டுப் பெண்களும் புதிய உணர்ச்சிபெற்றுக் கல்வி, கலை ஆராய்ச்சியில் முனைந்து, உலகப் புகழ் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்நூல் எழுதப்பெற்றது. இம் மாதிரி, யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் எழுதிய உலக விஞ்ஞானிகளின் வரலாறுகள் அவ்வப்போது வெளிவரும்.

இயற்கைக் கடவுளுக்கு வணக்கம்!

இராமச்சந்திரபுரம்,<br>13-4-1944<br>எகூ-க-எ௰

அன்பு நிலயத்தார்.

## பொருளடக்கம்

# அற்புதப் பெண்மணி

(ரேடியம் மேரி - கூரி வரலாறு)




## 1. மானியா

## (1867—1934)

இப்பெண்மணியின் படத்தைப் பாருங்கள்! இந்த அம்மாள் பெயர் மேரி கூரி (Marie Curie). இவளைக் கொண்டாடாத அறிவாளி உலகத்தில் கிடையாது: போலந்து (Poland) தேசத்தில் இவள் பிறந்தாள். தகப்பனுர் ஸ்க்லொடோவ்ஸ்கா (Sklodowska) என்பவர். போலந்தின் தலைநகர் வார்சா; அதிலுள்ள கல்லூரியில், தந்தை பௌதிகப் புலவராயிருந்தார்; தாயார் ஒரு பெண்கலாசாலையில் வேலைபார்த்தார்; இவர்களுக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. எல்லாருக்கும் இளையவளே மேரி கூரி.

அவள் 7-11-1867-ல் பிறந்தாள்; மானியா (Mania) என்பது அவள் வீட்டுப் பெயர். வீட்டில் வீண்பேச்சிராது; சாப்பாட்டு நேரந்தவிர மற்ற நேரமெல்லாம் உயர்ந்த புத்தகங்கள் படிப்பது; அறிவை வளர்ப்பது; குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லித் தருவது; பெரிய மனிதர் செய்த விஞ்ஞான (Science) அற்புதங்களைப்பற்றிச் சொல்வது—இப்படியே பொழுதுபோகும். ஏழைக் குடும்பந்தான்; என்றாலும், அதில் சரஸ்வதி களை நிரம்பியிருந்தது! அவள் வீடே பள்ளிக்கூடமாயிருந்தது.

## 2. கல்விப் பயிற்சி

மானியாவிற்குப் பத்து வயது பிறந்தது—(1878). தாய் இறந்துபோனள். தகப்பனர் மகளை ஒரு ரஷ்யப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். அந்தக் காலம், போலந்து, ரஷ்ய ஃஜாரின் கொடுங்கோலால் வருந்தியது. ரஷ்யருக்குப் போலிஷ்காரரைக் கண்டால் பிடிக்காது; பள்ளிப்பிள்ளைகளைக்கூடப் பரம சத்துருவாக வெறுப்பர். போலிஷ்காரர், தாய் மொழியை மறந்து ரஷ்ய பாஷையையே கற்கவேண்டும். கூரி, பள்ளிக்கூடத்தில் படாத பாடு பட்டாள். அவள் உள்ளத்தில் நாட்டன்புக் கனல் எழுந்தது; எப்படியாவது தான் ஒரு துறையில் புகழ்பெற்று தனது நாட்டை உயர்த்த நினைத்தாள். ஒரு நிமிஷங்கூட வீண்போக்காமல், நேரத்தைக் கல்வியிற் செலவிட்டாள். அவளுக்கு உலகமே கல்வி மன்றமாயிருந்தது. நூல்களே அவளுக்குப் பிரியமாயிருந்தன. ரஷ்யன், போலிஷ், ஜெர்மன், ஃபிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய பாஷைகளில் நல்ல தேர்ச்சி பெற்ருள்; பரீட்சைகளில் தேறிப் பரிசுகள் பெற்ருள்; பிரபலமான கவிகளைப் படித்தாள். இவற்ருேடு அவள் கணிதத்திலும், பௌதிக சாஸ்திரத்திலும் புலமை பெற்ருள். தனக்கென ஓர் ஆராய்ச்சிச்சாலை (Laboratory) எற்படுத்திக்கொண்டு, புதிதாக ஏதேனும் ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று அவள் விரும்பினள். பணமில்லை; மனமுண்டு. இந்தப்பெண் செல்வர் குழந்தைகள் சிலருக்குப் படிப்புச்சொல்லித்

தந்துகொண்டே தானும் பிழைத்து, அறிவையும் வளர்த்தாள்!

அந்தக் காலம் ரஷ்ய ஃஜாரின் கொடுங்கோற் காலம். பயந்து நடக்கும் முட்டாள்களே அவனுக்குப் பிடித்தவர்கள். சிறிது உரிமையுணர்ச்சி காட்டி, "ஏனிந்த அநீதி?" என்ருல், உடனே, சைபீரியா (Siberia) வனந்தரத்தில் வாடவேண்டியது தான்! ஜனங்கள் படித்துவிட்டால், அறிவு வந்து, கொடுங்கோலை எதிர்ப்பார்கள் என்று ஃஜார் பயப்பட்டான். ஆகையால், தாராளமாகப் படிக்கக்கூட மக்களுக்கு உரிமையில்லாதிருந்தது. அரசாங்க உத்தரவில்லாமல் யாராவது பள்ளிக்கூடம் வைத்தால் சிறைக்குப் போகவேண்டியதுதான்!

இந்தக் கொடுமையை எதிர்க்கவேண்டுமென்று மானியாவுக்குத் தோன்றியது. பதினேழுவயதுப் பெண்; கிராமக் குழந்தைகளுக்குப் பகலில் பள்ளிக்கூடம் போட்டு உற்சாகமாகப் பாடம் புகட்டினுள். சில மாதம் குழந்தை-சீர்திருத்தச் சாலையில் வேலை பார்த்தாள்; இரவில் அவள் ஸயன்ஸ் புத்தகங்களை ஆவலாகப் படித்தாள்; குறிப்பெடுத்தாள்; சிந்தித்தாள்; பௌதிக இரசாயனத் துறையிலேயே முன்னேற அவள் உள்ளம் துள்ளி யெழுந்தது! அவள் தன் உபாத்தியாயினி வேலையை உதறித்தள்ளி, வார்சாவுக்குப் போனுள். தகப்பனர் தயவினல் வார்சா கல்லூரி ஆராய்ச்சிச் சாலையில் ஞாயிற்றுக்கிழமை சாயங்காலத்தில் மட்டும் ஆராய்ச்சிசெய்ய அவளுக்கு இடம் கிடைத்தது. மற்ற நாட்களில் அவள் படிக்கவேண்டியதைப் படித்து, ஞாயிறன்று சோதனை செய்து, அறிவைத் திடப்படுத்திக்கொண்டாள்; அதனேடு

போலிஷ் தேசாபிமானிகளின் இரகசியச் சங்கத்திலும் அவள் சேர்ந்து நாட்டுக்காக உழைத்தாள்; அவர்கள் நடத்திய இரகசியப் பிரசங்கங்களைக் கேட்டு உணர்ச்சி பொங்கினாள். ஆனால், உலகில் தகுதியில்லாமல் உணர்ச்சி யிருந்தென்ன? ஆளும் வாளும் சேர்ந்தாலன்றோ வீரன்! மானியா ஸயன்ஸில் உயர்ந்த பட்டம்பெற்றுப் பிறகு தனது நாட்டிற்குப் புகழ்தேட விரும்பினாள். வயது வந்த பெண்ணுக்கு வலுவில் வரன்கள் வந்தனர். ஆனால், அவளுக்குக் கலியாணம் பண்ணி ஒருவனுடன் குடும்பம் நடத்தும் நினைப்பேயில்லை. அவள் "நான் காதற் காய்ச்சலை அனுபவிக்கவேண்டுமென்று சிலர் சொல்லுகிறார்கள்; அஃது என் நோக்கமில்லை. என்ன வந்தாலும் என் உறுதி மாறாது; நான் அறிவையே காதலிக்கிறேன்; அதற்கு அடுத்தபடி எனது நாட்டு விடுதலையை!" என்றாள். ஃஜார் ஆட்சி அவளை அறியவில்லை; ஆதரிக்கவில்லை. அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது.

## 3. பாரிஸ் பயணம்

இச் சமயம் அவள் உடன்பிறந்தார் படித்துத் தேறி உத்தியோகத்தி லிருந்தனர். அக்காள் புரோனியா (Bronia) பாரிஸில் இருந்தாள்; அவள் கணவன் காஸிமிர் துலுஸ்கி (Casimir D'luski) ஒரு டாக்டர். இருவரும் மானியாவிடம் பிரியங்கொண்டவர்கள். அக்காள் தங்கையை அழைத்தாள். "அக்கா, நான் பாரிஸ் வந்து உன்னுடன் தங்கி, பௌதிக டாக்டர் பட்டத்திற்குப் படிக்க விரும்புகிறேன்; உன் கருத்தென்ன?" என்றெழுதினள் மானியா. அக்காலம் போலிஷ் தேசாபிமானிகளுக்கும் கல்விமான்களுக்கும் பாதுகாப்பளித்துப் போற்றியது பாரிஸ். அதுவே மானியா மனதையும் கவர்ந்தது. புரோனியா எழுதினள்:

"தங்காய், நான் கல்வி முடித்து ஒரு டாக்டரை மணந்து குடும்பம் நடத்துகிறேன். ஒரு வருஷம் நீ எங்களுடன் இருக்கலாம்; சாப்பிடலாம்; மற்றச் செலவுகளுக்காக நீ கொஞ்சம் பணம் சேர்க்க வேண்டும். நீ ஸோர்போன் (Sorbonne) கலாசாலையில் இரண்டாண்டு படித்துப் பட்டம் பெறலாம்!"

மானியா பிள்ளைகளுக்குப் படிப்புச் சொல்லித் தந்து, ஒன்றும் இரண்டுமாக எப்படியோ ஒரு சொற்பத் தொகை சேர்த்துவிட்டாள்; பிறகு, தகப்பனிடம் தன் எண்ணத்தைச் சொன்னள். "மகளே, நீ பட்டம் பெற்று வா; உள்ளூரிலேயே வேலைபார்;

எல்லாரும் மகிழ்வுடனிருப்போம்!" என்று தந்தையும் நல்விடை தந்தார். மானியா தனக்குப் பயனுள்ள தட்டுமுட்டுச் சாமான்களையெல்லாம் பெட்டிபோட்டனுப்பினள்; வார்சாவிலிருந்து பாரிஸுக்கு மலிவான மூன்றும் வகுப்புச் சீட்டு வாங்கிப் பயணமானள் (23-9-1891). பாரிஸில், அக்காளும் அவள் கணவனும் மானியாவைப் பிரியமுடன் உபசரித்தனர்.

லூயிமன்னரின் குருக்கள், ஸோர்போன் என்பவர் தன் பெயரால் ஓர் அரிய பெரிய கலாசாலை எழுப்பினர். அதில் தத்துவம், பௌதிகம், இரசாயனம் முதலிய கலைகள் கற்று, 'டாக்டர்' பட்டம் பெறலாம். அதிலேதான் மானியா, 3-11-1891 முதல் படித்தாள்; அவள் இப்போது தன் பெயரை "மேரி" என்று வைத்துக்கொண்டாள். சுதந்தர பாரிஸும், ஸோர்போன் கல்வியும் மேரிக்கு இதந்தரும் இன்பமாயிருந்தன!

## 4. வருந்திக் கற்றாள்

மேரி சொற்ப நாட்களே அக்காளிடம் இருந்தாள்; அவள் கணவன், இன்பப் பிரியன்; நாடகம் நடனம் பியானோ என்றால் அவனுக்குப் பிடிக்கும். மேரிக்குத் தனிமையும் கல்வியுமே பிடிக்கும். டாக்டர் வீட்டிற்கு அடிக்கடி நோயாளிகள் வந்தனர்; போலிஷ் நண்பரும் வந்து பேச்சுக் கொடுத்தனர்; கல்லூரியிலிருந்தோ அந்த இடம் ஒரு மைல் தொலையிருந்தது. எல்லாவற்றையுங் கருதிப்பார்த்து மேரி, ஸோர்போனுக் கருகில் ஒரு வீட்டின் ஆறாவது மாளிகையிலிருந்த சிறிய அறையில் வாடகை பேசிப் புகுந்தாள்; மாதம் பத்து ரூபாச் செலவில், சிக்கனமாக வாழ்ந்தாள். கரி மூட்டையை வாங்கித் தானே மேலே சுமந்து சென்றாள்; கரியடுப்பிலும், சாராய விளக்கிலும் சமைத்துண்டாள். குழந்தைகள் சிலருக்குப் பாடஞ் சொல்லி, ஏதோ கொஞ்சம் சம்பாதித்தாள்; அறையின் தரை ஈரம்; தன் ஆடைகளை விரித்துப்போட்டுச் சமாளித்தாள். அக்காளுக்குப் பாரமில்லாமல் சுயேச்சையாகவே வாழ்ந்தாள். அக்காளும் கணவனும் அடிக்கடி அவளை வந்து கவனித்துக்கொண்டனர். படிப்புண்டு அவளுண்டு; புத்தகமுங் கையுமாகவே யிருப்பாள் மேரி; இரவு நெடுநேரம், மூன்று மணி வரையிற்கூட, விழித்திருந்து படிப்பாள். ஒருநாள் நான்கு மணி வரையில் படித்துவிட்டுக் காலையில் கல்லூரிக்குச் சென்று வந்து, மேரி புத்தகத்திலேயே ஆழ்ந்துபோனாள்;

உணவையும் மறந்தாள். அக்காளும் கணவனும் வந்து அவள் நிலைக்கு வருந்தி, அறையை ஒழுங்கு செய்து சமைத்து உண்விட்டனர். பரீட்சை நாள் நெருங்க நெருங்க, மேரி ஊணுறக்கத்தையும் மறந்து படித்தாள். இவ்வாறு சிரமப்பட்டு, 1893-ஆம் ஆண்டில் அவள் "பௌதிகப் புலமைப் பட்டம்" பெற்றாள்; 1894-ல் "கணக்குப் புலமைப் பட்டம்" பெற்றாள்; பிறகு ஃபிரெஞ்சு பாஷையை நன்றாகப் பயின்றாள். ஒருசமயம், அவள் கையில் பணமில்லை; அச்சமயம் அதிட்டவசமாக ஒரு வெகுமானப் பணம் சுமார் முந்நூறு ரூபா கிடைத்தது! அதை வைத்துக் கொண்டு அவள் டாக்டர் பட்டத்திற்கு முயன்றாள். தேசியத் தொழிற் சங்கம், காந்தத்தைப் பற்றி ஆராய அவளைப் பணித்தது. அவள் லிப்மான் (Lippman) என்னும் புலவர் ஆராய்ச்சிச் சாலையில் ஆராய்ச்சியைத் தொடங்கினாள். ஆனால், அது வசதிப்படவில்லை; இன்னும் சிறந்ததோர் ஆராய்ச்சிச் சாலையும், தன் சந்தேகங்களைத் தெளிவிக்க ஒரு புலவரும் வேண்டும்; தேடினாள் மேரி.

## 5. பியர் கூரி (Pierre Curie)

இச்சமயமே, இந்த விஞ்ஞானக் குமரியை, சிறந்த விஞ்ஞானப் புலவரொருவர் கண்டு வியக்கத் தொடங்கினர்—அவரே பியர் கூரி! பியர் கூரி, பௌதிக இரசாயனப் புலவர். அவர், டாக்டர் யூமேன் கூரியின் இரண்டாம் புதல்வர்; 15-5-1859-ல் பிறந்தவர். அவருடைய அண்ணன் ஜாக் கூரி, ஸோர்போனில் படித்து ஸயன்ஸ் பட்டம் பெற்ருர். பியர் கூரி பள்ளிக்கூடத்திற்குப் போகாமலே, தந்தையிடம் ஸயன்ஸ் கற்று, பிறகு பாஃஜீல் (Bazille) என்ற புலவரிடம் பௌதிக இரசாயனப் பயிற்சி பெற்று, பரீட்சை கொடுத்து, 16-ஆம் வயதிலேயே பி. ஏ. பட்டம் பெற்று, 18-ஆம் வயதில் புலவர் பட்டம் பெற்ருர்; பத்தொன்பதாம் ஆண்டில், பாரிஸ் ஸயன்ஸ் கல்லூரியில் ஓர் உதவியாசிரியர் ஆனர். தம் அண்ணனுடன் அவர் நாளெல்லாம் பௌதிக ஆராய்ச்சியிலேயே நீந்தி, புதுப்புது உண்மைகளைக் கண்டார். மின்சாரத்தின் அளவை நிறுக்க அவர் கண்டு பிடித்த பீஃஜோ எலெக்டிரிக் (Piezo Electrique - மின்னளவி) புகழ் பெற்றது. ஐந்தாண்டுகளுக்குப் பின், பியர் கூரி பாரிஸில் ஒரு பௌதிக இரசாயனப் பள்ளிக்கூடத்தில் முப்பது மாணவருக்குக் கல்வி பயிற்றி வந்தார். சம்பளம் 300 ஃபிராங்கு; அங்கே படிக வடிவுகளை (Crystaline forms) ஆராய்ந்து அவற்றின் ஒழுங்கு முறையைக் கணக்கிட்டு விளக்கினர்; மிக நுண்ணிய அணுக்களையும் அளக்கும் தராசு ஒன்றைக்

கண்டுபிடித்து அதற்குக் "கூரி தராசு" (Curie's Balance) என்று பெயரிட்டார்! காந்த ஆராய்ச்சி செய்து, புதிய விதியைக் கண்டார். அதற்குக் "கூரி விதி" என்று பெயர் வழங்குகிறது. இவ்வாறு 15-ஆண்டுகள் பாடுபட்டும், அவர் பெயர் பாரிஸில்கூடப் பரவவில்லை. அவர் மிகவும் அடக்கமானவர்; அதிகம் பேசமாட்டார்; தனிமை விரும்பி; நேரத்தை ஆராய்ச்சியிலேயே செலவிடுவார். ஆராய்ச்சிக் கூடமே அவர் உலகம். ஆதலால், அவர் பெயரும் அதன் நான்கு சுவருள் அடங்கியிருந்தது. ஒரு தரம் ஆங்கில ஸயன்ஸ் நிபுணரான கெல்வின் பிரபு பாரிஸுக்கு வந்து, கூரியின் ஆராய்ச்சிச் சாலையைப் பார்த்தார்; அவருடன் பேசி, அவர் மேதையை அறிந்து மெச்சினர்! அதன் பிறகு, கூரியின் பெயர் பரவியது. அவருக்குக் கல்வி யதிகாரிகள் "டாக்டர்" பட்டம் தர முன்வந்தனர். "தயவு செய்து எனக்கு டாக்டர் பட்டம் தாரீர்கள்; அஃது என் அமைதியைக் கெடுப்பதாகும்; நான் ஆயுள் நாட்களையெல்லாம் அடக்கமாக ஆராய்ச்சி செய்வதிலேயே செலவிட விரும்புகிறேன்" என்று கூரி மறுத்துவிட்டார். "ஆயுளைக் கலைக் கனவாக்கி, கனவில் புதிய உண்மையைக் காணவேண்டும்" என்பது அவர் மதம்!

வயது 35; இன்னும் அவர் மணம் புரியவில்லை; எந்தப் பெண்ணும் அவர் மனத்தைக் கவரவில்லை. "என் இயல்புடன் ஒத்திருக்க வேண்டும்; கலைத்திறமையுடன் ஒத்துழைக்க வேண்டும்; வெறும் மினுக்கிலும், தளுக்கிலும், விளையாட்டிலும் நாளைப் போக்கக்கூடாது. அத்தகைய மேதாவிப் பெண் எங்கே? இக்காலத்தில் அரிது அரிது" என்று அவர் நினைத்

தார்; ஸயன்ஸையே கூடிவாழ முடிவு செய்திருந் தார்.

ஆனுல், அவர் மனக்கனவில் உதித்த பெண் இதோ வந்துவிட்டாள்! பாரிஸில் பௌதிகச் சங்கம் உண்டு! நிபுணர் அதில் பேசினர். மேரி, தவருமற் சென்று, புலவர் பேச்சைக் கருத்துடன் கேட்டுப் பயன் பெறுவாள். அந்தப் புலவர் கூட்டத்தில், பியர் கூரி, மேரியை இரண்டு மூன்று தடவை பார்த்தார்; லிப்மான் ஆராய்ச்சிச் சாலையில் சுறுசுறுப்பாயிருக் கும் போதும், அவளைக் கவனித்திருந்தார். தாம் எழுதி அச்சிட்ட "காந்த மின்சார ஒழுங்கு" என் னும் கட்டுரையை அவளுக்கு அனுப்பினுர். அதன் மேல், "திருமதி மேரி ஸ்க்லொடோவ்ஸ்கா (Marie Sklodowska) வுக்கு, ஆசிரியர் பியர் கூரியின் நேயத் துடனும், மரியாதையுடனும்" என்றெழுதியிருந்தார். இருவர் மனமுங் கலந்தன!

ஒருநாள் கௌவால்ஸ்கி (Kowalski) என்ற பௌதிக சாஸ்திர நிபுணர் பாரிஸில் பிரசங்கம்செய்ய வந்தார். அவர் போலந்துக்காரர். அவரை முன்பே மேரிக்குத் தெரியும்; அவள் அவரைப் பார்த்துத் தனது நிலைமையைச் சொல்லி, "எனக்கு வழி காட்டத் தகுந்த புலவர் வேண்டும்" என்ருர். "மானியா, நாளை மாலை தேநீர் பருக வா! புலவரொரு வர் வருவார்; அவரே உனக்கேற்றவர்" என்ருர் கௌவால்ஸ்கி.

சென்ருள் மேரி; அங்கே தம் நண்பருடன் பியர் - கூரிதான் இருந்தார். கண்டதும் இருவரும் அன்பு கொண்டு, நெடுங்காலம் பழகியவர்களைப் போலப் பேசினர்! என்ன பேச்சு? எல்லாம் உயர்ந்த

அறிவிய லாராய்ச்சிதான். இந்தப் பெண் கேட்ட கேள்வியும், சொன்ன அரும்பொருள்களும், எதிரே யிருப்பவர் உள்ளத்தைக் கவர்ந்தன. "ஆகா, இந்த இளம் பெண்ணின் அறிவும், திருவும், ஆர்வமும், ஆராய்ச்சியும் எவ்வளவு அற்புதமானவை!" என்று வியந்தார் பியர் கூரி! "இந்த நண்பரின் புலமையும், இளம் பொலிவும், அழகும், அடக்கமும், அன்பும், புன்னகையும், கனவும், நினைவும், ஆராய்ச்சி விரிவும் அற்புதம், அற்புதம்!" என்று மேரி வியந்தாள். இருவருக்கும் நெருங்கிய நட்புண்டானது. 'இவளுக்கு அவர்; அவருக்கு இவள்' என்றே இருவரையும் இறைவன் படைத்திருந்தான் போலத் தோன்றியது! அன்று முதல் (1-8-1894), மேரி பியர்கூரியிடம் சென்று கலையாராய்ச்சியிற் பெரும்பயனடைந்தாள். இருவரும் தங்கள் அனுபவங்களைப் பேசிக் கொண்டனர்; உறவு நெருங்கியது; உள்ளம் ஒன்றியது; அன்பு முதிர்ந்தது; காதல் மலர்ந்தது. மேரி வார்சாவுக்கு ஒரு முறை சென்று தந்தையிடம் பியர் கூரியின் அருமை பெருமைகளைக் கூறினள். பியர் கூரி அன்புக் கடிதங்கள் எழுதி மேரியைப் பாரிஸுக்குத் திரும்பிவருமாறு மன்ருடினர். "என்னை மறக்காதே; நமது கலைக்கனவை மறக்காதே; என் அன்பை ஏற்றுக்கொள்; என்னுடனிரு!" என்று பியர் ஆர்வமுடன் முறையிட்டார்.

வந்துவிட்டாள் மேரி; அக்காள் அமைதியான இருப்பிடம் தந்து, அவளைத் தன்னிடமே இருக்கச் செய்தாள்; பியர்கூரி, அவளை ஆவலாக வரவேற்று அன்பு பாராட்டினர். மேரி வழக்கம்போல லிப்மான் சாலையில் ஆராய்ச்சி செய்தாள். அப்போது கூரி

அவளை அடிக்கடி கண்டார்; அவளுக்கு உற்ற துணை யாக இருந்தார். இருவரும் சேர்ந்து கூரியின் ஆராய்ச்சிச் சாலையிலும் உழைத்தனர்; ஒருவருக் கொருவர் இன்றியமையாதவ ராயினர்.

## 6. படித்தவர் குடித்தனம்

**26-7-1895:** காதலர் கலந்துவாழக் கருதினர். ஜாதகம், வரதட்சிணை, புரோகிதம், சீர், செய்மானம் எவையுமில்லை; மோதிரங்கூட மாற்றவில்லை. ஆளுக்கொரு 'பைஸைகிள்' (ஈருருளி) வைத்துக்கொண்டனர்; ஸயன்ஸ் ஆராய்ச்சியில் இருவரும் ஒன்றுபட்டனர். பியர் கூரியின் பெற்றோர் மகிழ்ந்தனர். மேரியின் கிழத் தந்தை வந்தார்; அக்காள் புரோனியா குதூகலமான ஏற்பாடுகள் செய்தாள்; கூரிவீட்டுத் தோட்டத்தில் ஒரு விருந்து நடந்தது. தம்பதிகளை, முதிய பெற்றோர் ஆசீர்வதித்துப் பேசினர்; சுருக்கமாகக் கலியாணமாய் விட்டது!

"படித்த பெண்கள் வீட்டைக் கவனிக்கமாட்டார்கள், இடுப்பு வணங்கி வேலை செய்யமாட்டார்கள்" என்று சிலர் சொல்லுகிறார்கள். இது பொய்! மேரி, கூரியுடன் எவ்வளவு ஒட்டுறவாகக் குடித்தனம் செய்கிறாள், பாருங்கள்!

வெள்ளைக்கார நாட்டில் ஒரு நல்ல பழக்கமுண்டு: கலியாணம் முடிந்ததும், தம்பதிகள் தனிக் குடித்தனம் செய்வர்; இருவரும் பாடுபட்டுப் பிழைப்பர்; பெற்றோருக்குச் சுமையிராது. காதலர் பிறர் கட்டுப்பாடில்லாமல் சுயேச்சையாயிருப்பர்!

கூரியும் மேரியும் ஒரு சிறு வீட்டில் குடித்தனம் செய்தனர். இருவரும் உயிரும் உடலும், பூவும் மணமும்போல் மனமொத்திருந்தனர். உடலே இரண்டு; உள்ளம் ஒன்று, உயிர்த்துடிப்பு ஒன்று!

இருவரும் இணை பிரிவதில்லை. கணவனுக்குக் குறைந்த சம்பளந்தான்; அதைக்கொண்டு மேரி, வீட்டுக் குடித்தனம் நடத்திவந்தாள். வரவு செலவுக் கணக்கெல்லாம் அவள் ஒழுங்காக எழுதினுள்; வீட்டைக் கண்ணுடிபோலச் சுத்தமாகவும், அழகாகவும் வைத்திருந்தாள். தனியாயிருந்தபோது மேரி ரொட்டி, கனி, தேநீர் சாப்பிட்டுக் காலந் தள்ளினுள். காதலன் வந்தவுடனே, அவள் பாக சாஸ்திரம் படிக்கத் தொடங்கினுள். அதிலுள்ளபடி சாமான்களை அளவாகப் போட்டுச் செம்மையாகவும், நாவுக்கினிமையாகவும், உடம்புக்குச் சுகமாகவும் சமைத்துப் பழகினுள். சமையலில் புதிய புதிய முறைகள் கண்டுபிடித்தாள். வீட்டில் சமையல், பாத்திரம் பண்டம் அடுக்கி வைத்தல் முதலிய எல்லாம் அவளே!

கூரி தம்பதிகள் அதிகாலையில் எழுந்திருப்பர்; வீட்டைச் சுத்தம் செய்து, அன்று செய்யவேண்டிய காரியங்களைக் குறித்துக் கொள்வர்; தேகசுத்தி செய்து கொள்வர். பிறகு, கணவன் தன் அலுவலைக் கவனிப்பான். மேரி ஸைக்கிளில் சந்தைக்குச் சென்று உணவுப்பொருள்கள் வாங்கி வருவாள்; காலை யுணவு தயாரிப்பாள். இருவரும் சேர்ந்து சாப்பிடுவர். கணவன் பள்ளிக்கூடத்திற்குச் செல்வான்; கூரியும் வீட்டுக் காரியம் முடிந்ததும், தன் ஆராய்ச்சிச்சாலைக்குச் சென்று பௌதிக சோதனைகளை நடத்துவாள். இடைவேளை யுணவையும் காலையிலேயே தயாரித்து விடுவதால் பகலெல்லாம் கலையாராய்ச்சியிலேயே செல்லும். மேரி ஐந்து மணிக்குத் திரும்பி வந்து, மாலை யுணவைத் தயாரிப்பாள்; கணவன் வந்ததும் உபசரித்து உணவு பரிமாறுவாள்.

இருவரும் சேர்ந்துண்டதும், சிறிது காற்ருட வெளியே உலாவி வருவர்; பிறகு, ஆராய்ச்சிச் சாலைக்குச் செல்வர். பியர்கூரியின் பள்ளிக்கூட ஆராய்ச்சிச் சாலையிலேயே மேரிக்கும் இருந்துதவ இடம் கிடைத்தது. இரவு நெடுநேரம், மின்சார வெளிச்சத்தில் இருவரும் சாத்திரங்களைப் படிப்பது, சிந்திப்பது, சோதிப்பது, தாம் கண்ட முடிவுகளைக் கணக்கிட்டெழுதுவது—இப்படியே செல்லும்! ஓர் உண்மையைச் சோதித்துக் கண்கூடாகக் கண்டாலன்றி அவர்களுக்கு உறக்கம் வராது. இருவரும் இனிய புன்னகையால் வேலையின் சிரமத்தைத் தீர்த்துக் கொள்வர்; மாதம் இரண்டொரு நாட்கள் இருவரும் ஸைக்கிளில் கிளம்பிப் பசும்வயல் சூழ்ந்த கிராமங்களில் சுற்றி வருவர்; இருக்கும்போதும், நடக்கும்போதும், எப்போதும் அவர்கள் பேச்சு, சாஸ்திரப் பேச்சாகவே யிருக்கும். மற்ற விவகாரங்களெல்லாம், பேச்சுமூச்சின்றிச் சிக்கனமாக நடக்கும். மாட்டுப் பெண்ணைப் பார்க்க, மாமியார் மாமனுர் வருவர். அவர்களை அன்புடன் உபசரித்து, மேரி மகிழ்விப்பாள்! மாமி—மருகிச் சண்டைக்கே இடமிராது. அக்காள் வருவாள்; தங்கை அன்புடன் உபசரிப்பாள். மேரி, தன் குடித்தனத்தைப் பற்றி முதிய தந்தைக்கும், தமையனுர்களுக்கும் கடிதம் எழுதுவாள்; ஒரு கடிதத்தில் இவ்வாறு எழுதுகிருள் :—

"நாங்கள் இனிது, இன்பமாயிருக்கிறேம்; உடல் நலமுடனிருக்கிறேம்; எக்குறையுமில்லை; குடும்ப வாழ்க்கை மிகவும் இனிதாயிருக்கிறது. வீட்டு வேலைகளை யெல்லாம் நான் எளிதாகவும்

சிக்கனமாகவும் நடத்துகிறேன். ஒரு வேலைக்காரி தினம் ஒரு மணி நேரம் வீடு சுத்தம் செயகிருள்; பாத்திரம் கழுவுகிருள்; மற்ற வேலை யெல்லாம் நானே செய்கிறேன்; என் அன்புக் கணவருக்கு நானே சுவையாகச் சமைத்து ஊட்டுகிறேன்; மாதம் இரண்டொரு முறை நாங்கள், என் கண வரின் பெற்றேரைக் காணச் செல்வோம்; அவர் களும் எங்களைக் காண வருவார்கள். எல்லாரும் அன்புடனிருக்கிறேம். நாங்கள் இன்றியமையாமல் வேண்டப்படும் சாமான்களையே வைத்துக் கொண் டிருக்கிறேம். ஆராய்ச்சிச் சாலையில் செய்ய முடியாத கலைப் பயிற்சிகளை வீட்டில் செய்கிறேம்; இங்கே படிப்போம்; அங்கே சோதித்துப் பார்ப் போம். இந்த வருஷம் எனக்கு ஸயன்ஸ் துறை யில் ஒரு வேலை கிடைக்கும். குடும்பத்திற்குத் தட் டில்லாதிருக்கும்; எங்கள் ஆராய்ச்சி யுண்டு, நாங்க ளுண்டு! நாங்கள் திருநாள், நாடகம், நடனம்-எதற் கும் போவதில்லை; கருத்தை எங்கும் சிதற விடுவ தில்லை. நாங்கள் தினம் மலர் வாங்கி வீட்டை அழகு செய்கிறேம்!"

இவ்வாறு குடித்தனம் நடத்திக் கொண்டே மேரி கூரி, டாக்டர் பட்டத்திற்கு வேண்டிய பௌதிகப் பயிற்சியும் செய்தாள்.

ஒரு வருஷம் காதலர் வாழ்வு இன்ப மலர்போலச் சென்றது! மலர் காய்கட்டிக் கனியத் தொடங் கியது! மேரி கருத் தரித்தாள். அதற்குரிய தளர்ச்சி அயர்ச்சிகளுடும் அவள் தன் கடமையை மறக்க வில்லை. இச்சமயம் வார்சாவிலிருந்து தகப்பனுர் வந் திருந்தார்; மகள் தந்தையுடன் வசித்தாள். கணவர்

மனைவிக்குச் செய்யவேண்டிய கடமைகளை அன்புடன் செய்தார். மாமனார், அக்காள் கணவன் - இருவரும் டாக்டர்கள்; அடிக்கடி வந்து கவனித்துக் கொண்டனர்; மேரி பிரச்வ வேதனையைக்கூட வாய் விட்டுமுனங்கவில்லை; சுகப்பிரசவமானது! 12-9-1897; மேரி கூரிக்கு முப்பதாம் வயதில் பெண்குழந்தை பிறந்தது. "நமக்கு ஓர் அரசி பிறந்தாள்" என்று சதிபதிகள் மகிழ்ந்தனர்! பெண்ணுக்கு ஈரேன் (Irene) என்று பெயர் வைத்தனர். மேரி, குழந்தையைத் தினம் குளிப்பாட்டிச் சுத்தம் செய்து, புதிய ஆடை யணிவித்து, பால் கொடுத்து, தாத்தாவிடம் விட்டுவிட்டு, ஆராய்ச்சிச் சாலைக்குச் சென்றாள். பியர் கூரியின் தாய் இறந்துபோனாள்; கிழத் தந்தை, டாக்டர் கூரி, ஈரேனோடு கொஞ்சிக் குலாவி, விளையாடி இன்புற்றார்.

# 7. பொலோனியம்

(POLONIUM)

கூரியம்மாள், டாக்டர் பட்டம் (Doctorate) பெற முயன்றாள். அதற்கு ஏதாவது புதிதாகக் கண்டு பிடிக்கவேண்டும். எதைச் சோதிப்பது? என்ன கண்டு பிடிப்பது? மேரி சிந்தித்தாள்.

பாரிஸில், ஹென்ரி பெக்கெரெல் (Henry Becquerel) என்ற புகழ்பெற்ற பௌதிக நிபுணர் இருந்தார்; அவரைக் கூரி தம்பதிகளுக்கும் தெரியும். அவர் யுரானியச் சத்தில், ஒரு கதிர் விரிவதைக் கண்டார். யுரானியம் (Uranium) என்பது ஓர் அபூர்வமான உலோகப்பொருள். அது கிழக்குஆஃபிரிக்கா, பொஹீமியா, ஸாக்ஸனி, கொலொராடோ முதலிய நாடுகளிலேதான் கிடைக்கும். அது பிட்ச் ப்ளெண்டு (Pitch Blende) என்ற தாதுவிலிருந்து வடிக்கப்படுவது. அதில் ஈயம், முதலிய உலோகங்கள் சேர்ந்திருக்கும்; கந்தகத் திராவகம், அக்கினித் திராவகம் எல்லாம் சேர்த்துப் பல இரசாயனமுறைகளால் யுரானியத்தை மட்டும் பிரித்தெடுப்பார்கள். இதன் கலப்புகளைப் புகைப் படத்திற்கும், கண்ணாடித் தொழிலுக்கும் உபயோகிக்கிறார்கள். ஹென்ரி பெக்கெரெல், 1896-ஆம் ஆண்டு யுரானியச் சத்தை ஒரு கறுப்புக் காகிதத்தில் மடித்து புகைப்படக் கண்ணாடிக்கடியில் வைத்தார்; கண்ணாடிப் படம் பாதிக்கப்பட்டிருந்தது. அவர் உடனே யுரானியத்தில் புதிய கதிரொளியிருப்பதாகக் கண்டார். வைத்தியர்கள், உடம்புக்குள் உள்ள உறுப்புக்களைச் சோதிக்க வேண்டுமானால் X—கதிர்

(எக்ஸ்-ரே) புகுத்திப் பார்ப்பார்கள். X-கதிர் கண்ணுக்குத் தெரியாது; அதன் செயலை நாம் அறியலாம். இக்கதிர் காகிதம், மரம், அலுமினியம், நமது தோல், சதை—இவற்றை ஊடுருவிச் செல்லும்; எலும்பை ஊடுருவாது. இந்த X-கதிரை 1895-ஆம் ஆண்டு ரோண்ட்ஜன் (W. K. Rontgen) என்பவர் கண்டுபிடித்தார். இது நேராக வீசும் மின்காந்த அலை; இக் கதிரைப் போன்று, யுரானியமும் கதிர்வீசக் கண்ட பெக்கெரெல், தம் அனுபவத்தை ஒரு கட்டுரையாக வெளியிட்டு, பாரிஸ் இரசாயனக் கழகத்திற்கு அளித்தார்; அறிஞர் கூட்டங்களிலும் பேசினர். மேரி கூரி, பெக்கெரெல் ஆராய்ச்சிகளை ஆழ்ந்து படித்தாள்; கருத்துடன் கேட்டாள்; அவர் கண்ட யுரானியம் கதிரையே சோதித்துப் புதுமை காண முனைந்தாள்!

இஃது, அரிய பெரிய முயற்சி! ஏராளமான தாதுப் பொருள்கள், பணம், சலியா வுழைப்பு, கவனமான சோதனை, மின்சார வசதியுள்ள இடம், பல துணைக் கருவிகள், அளவைக் கருவிகள் எல்லாம் வேண்டும். வழி? மனத் துணிவுதான்! முயற்சி செய்தால் எல்லாம் வரும்; சும்மா உட்கார்ந்திருந்தால் சோம்பலே வரும். மனித வாழ்வில் எப்பாடுபட்டாவது ஒரு புதுமை கண்டு, உலகிற்குதவ வேண்டும் என்று கூரியம்மாள் உறுதி கொண்டாள்! ஸோர்போன் கழகத்தைச் சேர்ந்த கட்டிடங்களில் ஒன்றைப் பெற முயன்றாள்; கழகத்தாருக்குத் தமது கருத்தைத் தெரிவித்தாள்; "இடமில்லை" என்ற பதிலே வந்தது.

"இது வீண் முயற்சி", "இஃதென்ன பௌதிகப் பைத்தியம்!" என்று சிலர் தடுத்தனர்; நகைத்தனர். பெண் கலங்கவில்லை. பியர்கூரி வேலை பார்க்கும்

பௌதிகப் பள்ளிக்கூடத்தில், ஒரு பழைய மரக்குடில் இருந்தது; அது மழையில் ஒழுகும்; பனியில் ஈர மாயிருக்கும்; வெயிலில் வேர்க்கும். அது, முன்னே உடற்கூறு கற்கும் மாணவர் பிணச் சோதனை செய்யும் இடமாயிருந்தது; பிறகு பிணங்களை வைக்கவும் தகுதியில்லாமற் போனது. அதில் ஓட்டை உடைசல் சாமான்களே மிச்சம். ஆனால், ஒரு நன்மை: அந்தக் கட்டிடத்தை மதித்து யாரும் வரமாட்டார்கள்; தனியாக, நிம்மதியாக வேலை நடக்கும்—அதுதான் கூரி தம்பதிகளுக்கு வேண்டும். பள்ளிக்கூடத் தலைவர் ஷுட்ஃஜென்பெர்ஜர் (Schwt-zenberger) என்பவர் பியர் கூரியிடம் அன்பு மிகுந்து, அந்த இடத்தில் சோதனைச்சாலை நாட்ட அனுமதித்தார். சும்மா இல்லை—வாடகைக்குத்தான்! "கிடைத்தது போதும்; வந்தனம்" என்று கூரியம்மை அந்த இடத்தைச் சுத்தம் செய்தாள்; ஆராய்ச்சிக்கு வேண்டிய பௌதிக இரசாயனக் கருவிகளை வாங்கி ஒழுங்காக அடுக்கி வைத்தாள்; மின்சார வசதி செய்து கொண்டாள். பியர் கூரி, தம்மிடமிருந்த கருவிகளைத் தந்து, மனைவியுடன் உற்சாகமாக ஒத்துழைத்தார். ஊண் உறக்க நேரந்தவிர, மற்ற நேரமெல்லாம் இருவரும் சுறுசுறுப்பாக ஆராய்ச்சிகள் செய்தனர்: யுரானிய அணுக்களைப் பகுத்துத் தொகுத்து ஆராய்ந்தனர்; அதன் கதிரின் நுட்பத்தைக் கண்டுகொண்டனர். "இந்தமாதிரிக் கதிர்விடும் புதிய பொருள்கள் வேறு இருக்கலாம்" என்று கூரியம்மாளுக்குப் பட்டது. தோரியம் என்ற தாதுவைச் சோதித்தாள் (இஃது இந்தியாவிலும், ப்ரெஃஜீலிலும் கிடைக்கும் பிரகாசமான தாது; காந்த-

விளக்குகளில் உபயோகப்படுவது). அதிலிருந்தும் கதிர் விரிந்தது. இப்படிக் கதிர் விரியும் தாதுக்களுக்குக் "கதிரிப் பொருள்கள்"(Radio-active Substances) என்று பெயரிட்டாள். இந்த வார்த்தை, அவளாலே தான் பெருவழக்கானது. உலகிலுள்ள இரசாயன தாதுக்களை யெல்லாம் அவள் வகுத்து, தொகுத்து, தனித்து, சேர்த்து, பொறுமையாக இடித்து, திராவகங்களை ஊற்றி, கலக்கி, காய்ச்சி, வடிகட்டி மின்சாரம் புகுத்திச் சோதித்தாள்; கதிரிடும் பொருள்கள் சில கண்டாள். யுரானியத்தை விடப் பன்மடங்கு கதிரிடும் இரண்டு பொருள்கள் அவள் ஊகத்திற்குத் தட்டுப்பட்டன. அவற்றைக் கண்ணுக்கு மெய்யாகக் காட்ட முயன்றாள். நான்காண்டுகள், அவள் பட்ட பாடு கொஞ்சமன்று. கணவரும் மற்ற நினைவுகளைக் கட்டிவைத்து, மனைவிக்குத் துணைசெய்தார். "கஷ்டமாகத்தானிருக்கிறது; கவலைகள் கழுத்தைப் பிடிக்கின்றன; என்றாலும், எடுத்த காரியத்தை அடுத்து முயன்று முடித்துவிட வேண்டும். தளர்ச்சிக்கு மருந்து தன்னம்பிக்கையே! என்ன வந்தாலும் வெற்றி காணவே தீர்மானித்துள்ளோம். என் கணவர் என்மீது அன்பு பாராட்டுகிறார். பழகப்பழக எங்கள் அன்பு பன்மடங்கு அதிகரிக்கிறது. குழந்தை ஈரேன் தவழ்ந்து, தளிர்நடை போடுகிறாள். தாத்தா எங்களுடன் இருக்கிறார். நாங்கள் ஆராய்ச்சிச் சாலையில் இரவும் பகலும் சோதனை நடத்துகிறோம்; இரண்டு புதிய கதிரிப்பொருள்கள் இருப்பதாக அறிகிறோம்; ஒன்றைக் கண்டுபிடித்து விட்டோம்" என்று கூரியன்னை ஒரு கடிதத்தில் எழுதினாள்.

ஆம்; பிட்ச் ப்ளெண்டு!(Pitch Blende), சாகோ

லிட் (Chalcolite), யுரானைட் (Uranite) முதலிய கதிரிப்பொருள்களைக் கரைத்துக் கரைத்து, இறுத் திறுத்து, வடித்து வடித்துப் பல இரசாயன மாறு பாடுகளைச் செய்து, 1898-ஆம் ஹு ஜூலை மாதம் கூரிகள் ஒரு புதிய கதிரிப்பொருளைக் கண்டனர்; களிதுள்ளினர்!

"மேரி, இதற்கு என்ன பெயரிடலாம்?" என்று பியர் கூரி மனைவியைநோக்கிக் கேட்டார். மேரி சிந் தித்தாள்; அவள் முன் தாய்நாடு நின்றது—போலந்து! அந்த பெயரையே அழித்து, ரஷ்ய ஃஜார் கொடுங் கோல் நடத்துவதைச் சிந்தித்தாள் தேசபக்தை! தன்னவர் அன்னியரிடம் படும் சித்திரவதை அவள் முன் நின்றது. தனது தேசப் பெயரும் பெருமையும் விளங்கவே ஒரு பெயரைக் கண்டாள். "பியர், இன்று நாம் கண்ட புதுப்பொருளைப் 'பொலோனி யம்' என்போம்" என்ருள்! "மிகவுஞ் சரி" என் ருர் இணக்கமுள்ள கணவர்.

இப்படி நாமும் ஏதாவது கண்டுபிடித்து 'தமி ழம்' 'பரதம்' என்று நமது நாட்டுப் பெயர்களை வைத்தால் நன்ருயிருக்கும்!

## 8. ரேடியம் (கதிரி)

பிட்ச் ப்ளெண்டில் இன்னொரு கதிரிப்பொருள் மறைந்திருப்பதாகக் கூரியம்மாள் அறிந்தாள்; தென்பட்டால் அதை "ரேடியம்" என்றழைப்ப தாகச் சொல்லிச் சோதனை நடத்தினாள். ரேடியம் மிகவும் அரியது; டன் டன்னாகப் பிட்ச் ப்ளெண்டை அலசி இறுத்துப்பார்த்தால், துளி ரேடியம் கிடைக் கும். அவ்வளவு பிட்ச் ப்ளெண்டிற்கு எங்கே போவது? அது படு விலை! யுரானியம் இறுக்க வும் கண்ணாடித் தொழிலுக்கும் அதைச் செல்வ வணிகர் அள்ளிச் செல்வர். பரம ஏழைகளான கூரி தம்பதிகளுக்கு, அதை விலை கொடுத்து வாங்கமுடி யாது. கூரிகள் பின்னடையவில்லை. தங்கள் முயற் சியையும் தேவையையும் பற்றி, ஆஸ்திரிய சர்க்கா ருக்கு விண்ணப்பம் செய்தனர்; அறிஞர் சிலருக்கும் எழுதினர். வியென்னா ஸயன்ஸ் கழகப்புலவர் ஸுயெஸ் (Suess)என்பவரே ஆஸ்திரிய சர்க்காருக்குச் சிபார்சு செய்தார்; மற்றவர்கள் நகையாடினார்கள். "ஸெய்ன்ட் ஜோஷிமாதால்" (Saint Joachimathal) என்ற சர்க்கார் சுரங்கத்தில் பிட்ச் ப்ளெண்டு ஏராள மாக விளைந்தது. அதனின்று, யுரானியத்தை இறுத் தது போக மிச்சக் கசண்டைக் குப்பையாகக் குவித் திருந்தனர். சர்க்கார் உத்தரவு வந்தது.

"பாரிஸில் இரண்டு பைத்தியங்களுக்கு வேண்டு மாம்; இந்தக்குப்பையை ஒரு டன் தள்ளிவிடு! இது

சும்மா ; மேற்கொண்டு வேண்டுமானுல் விலைபோட லாம்" என்றனர் சுரங்கத்தார்......இந்தமட்டாவது உத்தரவானதே !

* * *

ஒருநாட் காலை பௌதிகக் கலாசாலைக்கு முன் னுள்ள லோமோந்து தெருவில், ஒரு பெரிய சரக்கு வண்டி வந்து நின்றது. ஆராய்ச்சிச் சாலையில் வேலை செய்துகொண்டிருந்த கூரி தம்பதிகள் ஓடிவந்து பார்த்தனர். "ஆ, என் சாமான் வந்துவிட்டது!" என்று துள்ளிக் குதித்தாள் மேரி; ஆவலாக ஒரு சாக்கைப் பிரித்துக் கைவிட்டு ஒரு பிடி எடுத்தாள் ; 'என் அருமைப் பிட்ச் ப்ளெண்டு' என்று மகவைப் போல் அதைக் கொஞ்சினுள். "பியர், இதில் என் ரேடியம் ஒளிந்திருக்கிறது ; கண்டு பிடிப்போம்" என்ருள் ; தங்கம் வெள்ளியை அடுக்குவதுபோல அந்தச் சரக்கைக் கருத்துடன் வைத்துக் காத்தாள்.

செங்கல் வந்தால் வீடாய்விடுமா ? இரசாயனக் குப்பை வந்தால் ரேடியம் ஆய்விடுமா ? அதை எத்தனையோ முறையில் இடித்துப் பெரிய அண்டாக் களில் காய்ச்சி வடித்து இறுத்தல்லவா ரேடியம் காணவேண்டும் ? அதற்கு எவ்வளவோ திராவக இரசாயன மின்சாரச் செலவு பிடிக்குமே! அத்தனைக் கும் பணம் ? மேரியும் கூரியும் தம் செலவுகளைச் சுருக்கினர் ; பசிக்கே உண்டனர் ; எளிய உடை யணிந்தனர் ; செலவுபோக மிச்சத்தையெல்லாம் ஆராய்ச்சியில் யோட்டனர். அக்காலம் கூரியம்மாள் எழுதிய கடிதங்களில் இக்குறிப்புகள் காண்கின்றன-

"எங்களிடம் பணமில்லை ; போதிய கருவிக ளில்லை ; சரியான இடமோ, சகாயமோ இல்லை ;

இருந்தாலும் தைரியமிருக்கிறது ; எப்படியோ காரியம் நடக்கிறது ! படிக்கும்போது சகோதரி கணவர், நான் தியாக வீர வாழ்வு வாழ்வதாகச் சொன்னர். இப்போது அதைவிடக் கடுமையான தியாக வீர வாழ்வு வாழுகிறோம். ஊணுறக்க நேரம், சாயங்காலம் கொஞ்சம் குழந்தையைக் கொஞ்சும் நேரந்தவிர, மற்ற நேரமெல்லாம் ஆராய்ச்சிக் கொட்டகையிலேதான் ! குளிர், பனி, வெயில், மழை பாராமல் உழைக்கிறோம். அங்கேயே கணவருக்கு உணவுகூடத் தயாரிப்பதுண்டு. தாதுக்களை அளவாகப் போட்டுப் பெரிய அண்டாக்களில் காய்ச்சி வடிகட்டி திராவகங்கள் ஊற்றிச் சோதித்துச் சோதித்து வருகிறோம். கடினமான வேலை ; நம்பிக்கை உந்துகிறது. பௌதிக அறிஞர் சிலர் வந்து எங்கள் ஆராய்ச்சியைக் கவனிக்கின்றனர்; பியர்கூரியுடன் அளவளாவிச் செல்கின்றனர். **பெமோந்து** (Bemont) என்னும் அறிஞர் எங்களுக்கு உதவியாயிருக்கிறார். **ஆந்த்ரே தேபியேர்ன்** (Andre Debierne) என்னும் பௌதிகப் புலவரும் அன்புடன் வந்துதவுகிறார். இவர் **ஆக்டினியம்** (Actinium) என்ற புதிய கதிரிப்பொருளை பிட்ச் ப்ளெண்டில் கலந்த இரும்புச் சத்திலிருந்து கண்டுபிடித்தார். நாங்களும் அதை அறிவோம். இவர் எங்களுடன் ஒட்டுறவான நண்பரானர். எங்கள் முயற்சி பலனளிக்குமென்றே விடாது பாடு படுகிறோம்.''

இப்போது, கூரிக்கு 500 ஃபிராங்குகளே சம்பளம் ; (ஒரு ஃபிராங்கு ஆறணு எட்டுக் காசு) ; அது குடும்பத்திற்கே போதாமலிருந்தது. ஆராய்ச்சிச் செலவிற்கு வேறு வழி தேடவேண்டும். அச்சமயம்,

ஸோர்போனில் 10,000-ம் ஃபிராங்கு சம்பளமுள்ள ஒரு பௌதிகப் புலவர் வேலை காலியானது; பியர் மனுப்போட்டார்; அவரை அறிஞர் அறிவர். பௌதிக இரசாயன சாத்திரங்களில் அவர் ஒப்புயர் வற்ற நிபுணர்; எத்தனையோ புதுமைகளைக் கண்டவர்! இருந்துமென்ன? அவர்மேல் பொறாமை கொண்டு, சிலர் தடுத்துவிட்டனர்; வேலை கிடைக்கவில்லை; பிறகு, பல்கலைச்சாலையில் (Polytechnical School) ஒரு துணையாசிரியர் பதவி கிடைத்தது. அச்சமயம் இவர் அருமை பெருமைகளை அறிந்து ஜினேவா சர்வ கலாசாலை 10,000 ஃபிராங்குகள் சம்பளம் போட்டு இவரை அழைத்தது. பியர்கூரி சென்றார். அங்கே மேரி கூரிக்கும் ஒரு வேலை கிடைத்தது. ஆனால், இருவர் உள்ளமும் ரேடியத்தில் இருந்தன. சிலநாள் வேலை பார்த்து, மறுபடி பாரிஸுக்கே வந்தனர். இவ்வாறு அன்னியர்மதித்த பிறகே தன்னவரும் மதித் தனர். ஸோர்போன் கிளைஸ்தாபனத்தில் பியர்கூரி பௌதிகப் புலவரானார். மேரிகூரிக்கு ஒரு பெண் பாடசாலையில் அதே அலுவல் கிடைத்தது. இருவரும் அலுவலுடன் ஆராய்ச்சியும் நடத்தினர். பாடு பட்டுச் சம்பாதித்ததை யெல்லாம் ரேடிய ஆராய்ச்சி யில் போட்டனர். நாளெல்லாம் வேலைதான்—மகா சிரம மானவேலை! ஆனால், இன்னும் ஒரு பெரிய ஆராய்ச்சிச்சாலை வாங்கப் பணம் வேண்டும். ஸோர் போனில் மறுபடி வேலை காலியாகி, முயன்றும் கிடைக்கவில்லை. பாரிஸ் கலைக்கழக அங்கத்தினர் தேர்தலுக்கு நின்றார் கூரி; அவருடன் போட்டி போட்ட ஒருவரே வென்றார். "கூரிக்குப் பட்டம் தரு வோம்" என்றனர். "பட்டம் தேவையில்லை; எனக்கு

நல்ல ஆராய்ச்சிச்சாலை தாருங்கள் !" என்றார் கூரி; அதுதான் கிடைக்கவில்லை. கூரி, தற்புகழ்ச்சி யில்லாதவர்; அடக்கமானவர்; கலைக்கே பலிதானமான புலவர். அவர் பெருமையைச் சிலர் அறிவர்; அறிந்தும் சிலர் பொறாமையால் போற்றார்; தூற்றவும் செய்வர். கூரிகளுக்கு ஆராய்ச்சிச்சாலையே உலகம். உள்ள மெல்லாம் கலையார்வமே; வாழ்வெல்லாம் பௌதிக இரசாயனச் சோதனையே; ஊணுறக்கங் கூடத் துறந்து, இருவரும் உழைப்பாய் உழைத்தனர்; உடல் இளைத்தனர்! மேரி அடிக்கடி சாத்திரப் பிரசங்கம் செய்வதுண்டு; அப்போது அவள் உடல் மெலிவைக் கண்ட நண்பர் மனமுருகினர்; ஓய் வெடுத்துக் கொள்ள வற்புறுத்தினர்.

தகப்பனார் சாகக்கிடந்தபோது, மேரி, தன் கணவனுடன் போலந்திற்குச் சென்றாள். அங்கே அண்ணன் ஜோஸெஃப் புகழ்பெற்ற டாக்டராயிருந்தான்; மூத்த அக்காள், புரோனியாவும் அவள் கணவன் டாக்டர் காசிமீரும், ஃஜாகோபான் மலையில் சுகாதார நிலயம் நடத்தினர். அடுத்த அக்காள் ஹெலா (Hela) உபாத்தியாயனியா யிருந்தாள்; அவள் கணவன் புகைப்படம் பிடித்து நன்றாகச் சம்பாதித்தான். மக்கள் நல்ல நிலையிலிருப்பது கண்டு முதிய தந்தை மனமகிழ்ந்தார்! அப்பாவிடம் மேரிக்கு அன்பதிகம்; ஆவலாகப் பார்க்கவந்தாள்... அப்பா உடலைத்தான் சவப்பெட்டிக்குள் பார்த்துக் கண்ணீர் வடித்தாள்!

மேரி பாரிஸ் திரும்பினாள்; கருத் தரித்தாள்; மற்றொரு மகவைக் காண ஆசைகொண்டாள்; ஆசை வீணானது; காய் விழுந்தது; மெல்லுடல் துரும்பாய்

இளைத்தது கணவனுக்கும் உடம்பு படுத்தது—வாத நோய், இரவெல்லாம் வலி, புலப்பம்! மேரி தன் பச்சை யுடலையும் நோயையும் பாராட்டாமல் கணவனுக்குத் தொண்டு செய்தாள்; இச்சமயம் அக்காள் புரோனியாவின் குழந்தை இறந்தது. இச்சம்பவங்களால் மேரியின்முன்னே சாவின் அச்சம் பேய்போல வந்து நின்றது.

பியர் நோயால் புலம்புவார்.

—என் கண்ணுளா, என்ன செய்கிறது?

—ஒன்றுமில்லை; நீ அமைதியாயிரு! ஒருநாள் உடலை உதறிச் செல்ல வேண்டியதுதானே?

—நீர் சென்ருல், எனக்கு வாழ்வேது? நானும் இத்துன்பச் சுமையை உதறித் தள்ளி உம்மைத் தொடர்வேன்.

—கண்ணே, அப்படி நடக்குமுன் எடுத்ததை முடித்து விடுவோம்...

—ஆம்; ரேடியம் கண்ட பிறகு சாவின் நினைப்பு.

இருவரும் மனவுறுதியால் நோயை மறந்தனர்; சாவுடன் போராடிக்கொண்டே சாத்திர ஆராய்ச்சி செய்தனர். முயற்சி பலித்தது. ஒருநாள் இரவில் ஆராய்ச்சிச் சாலையிற் புகுந்தாள் மேரி; கண்ணாடிக் குப்பி பளபளத்தது; ரேடியம் புலனனது! துள்ளிக் குதித்தாள்! கணவனை அழைத்தாள்! கவலையெல்லாம் மறந்தாள்—“கண்டோம் ரேடியம்!” என்ருள். கணவர், “நாளையே உலகிற்கும் அறிவிப்போம்” என்ருர்!

1899-முதல் 1904-வரையில் இருவரும் செய்த ஆராய்ச்சிகளும் சோதனைகளும் ரேடியப் புதுமைகளும் கட்டுரைகளாகவும், பிரசங்கங்களாகவும் புறப்பட்டு அறிஞர் மனத்தைக் கவர்ந்தன.

ரேடியத்தின் பெருமை ; ரேடியக் கதிரி ; அதன் சக்தி ; ரேடியத்தின் செயல் ; நாங்கள் கண்ட புதிய கதிரி—அதன் கதிர்களின் இயல்பு ; ரேடியத்தின் பௌதிக ரசாயனப் பயன்கள் ; ரேடியத்தின் நிறை, அது பரப்பும் சூடும் கதிரும், ரேடியமும் வைத்தியமும் முதலிய பல கட்டுரைகள் வெளிவந்தன. இவர்கள் ஆராய்ச்சிகளை மெச்சி அறிஞரும் கட்டுரைகள் எழுதினர்.

# 9. ரேடியத்தின் பெருமை

ஐரோப்பா கலையாராய்ச்சிக்கு முதன்மை தரும் கண்டம். "இன்று இதைக் கண்டோம்! நாளை எதைக் காண்போம்? என்ன புதுமை செய்வோம்?" என்றே அதன் வாழ்வு முன்செல்லுகிறது; இடத்தையும் காலத்தையும் வெல்லுகிறது. கலைத்துறையில் யாராவது எங்காவது புதுமை கண்டால், உடனே ஐரோப்பிய மூளை அதை ஏற்று, மேற்கொண்டு சோதனை செய்யும். பாரிஸில் மேரிகூரியும் பியர் கூரியும் நீண்ட உழைப்பால் "ரேடியம்" என்ற அரிய புதிய கதிரிப் பொருளைக் கண்ட செய்தி, உடனே காட்டுத் தீப் போலப் பரவியது! ரேடியம், உப்பைப் போல் வெள்ளையான தூள்தான்; ஆனால் அதன் சக்தி அபாரமானது; யுரானியத்தைவிட அதன் கதிர்கள், இருபது லட்சம் மடங்கு சக்தி வாய்ந்தன. 1800 ஆண்டுகள் அது கெடாதொளிரும். அதன் ஒளி, பட்டப் பகலில் தெரியாது; இருட்டில் தெரியும். இருளில் அதன் வெளிச்சத்தில் புத்தகம் படிக்கலாம். அது, தன்னைச் சுற்றிலும் சூடும், ஒளியும், மின்சக்தியும் பரப்பும். அது, பஞ்சையும் காகிதத்தையும் எரித்துவிடும். ரேடியத்தைப் பார்க்க அறிஞர் படைதிரண்டு வந்தனர். இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா, டென்மார்க்கு, இத்தாலி, ரஷ்யா முதலிய நாடுகளிலிருந்து போற்றுரைகள் வந்து குவிந்தன!

1903-ல் ராம்ஸே, ஸோடி (Ramsay and Soddy) என்ற ஆங்கில நிபுணர்கள், ரேடியத்தைச் சோதித்தனர்; அது ஹீலியம் என்ற வாயுவை இடைவிடாமல் பரப்பக் கண்டனர். யுரானியத்தைவிட ரேடியக் கதிர்களுக்கு அளவற்ற சக்தியுண்டு; அது வேறெந்தப் பொருளாலும் பாதிக்கப்படாமல், தன் கதிரையும் வெப்பத்தையும் பரப்பும். அது தன்னைச் சார்ந்த பொருளையும் பளபளக்கச் செய்யும். வயிரத்தை அதன்முன் வைத்தால், 'டால்' வீசும். அதனால் நல்ல வயிரம் போலி வயிரம் இன்னதென்று கண்டுபிடிக்கலாம்.

ரூதர்ஃபோர்டு (Rutherford) என்னும் மேதாவி, ரேடியத்தை வியந்து போற்றிப் பல சோதனைகள் செய்து அதன் கதிரியக்கத்தில் எத்தனையோ புதுமைகளைக் கண்டார்: முதன்மையாக ரேடியம் நைடன் (Niton) என்ற காற்றை இயல்பாக எப்போதும் பரப்பிச் சுற்றியுள்ள பொருள்களில் பெரிய மாறுதல் செய்வதைக்கண்டார்.

ரேடியம், கூரிகளின் அருமைக்குழந்தை போன்றது! செல்லக் குழந்தை போன்று அது தொல்லையும் கொடுத்தது! ஆராய்ச்சிச் சாலையில் வைத்த ரேடியம், சுற்றிலும் வெப்பமும், ஒளியும், மின்சாரமும் அபாரமாகப் பரப்பி அங்கிருந்த பண்டங்கள், கருவிகள், துணிமணிகள், ஆட்களைக்கூடப் பாதிக்கத் தொடங்கியது. அதைத் தொட்டால் கை வேகும். மேரிகூரி கைகள் அதனால் அடிக்கடி வெந்தன.

ரேடியத்தை வால்கோஃப் (Walkoff) என்ற ஜெர்மன் அறிஞர் பரிசோதித்து, "அஃது புண்ணாற்றும் உயர்ந்த மருந்து" என்றார். உடனே அதைச்

சோதிக்கப் பியர்கூரி முனைந்தார்; வெறுங்கையால் ரேடியத்தைத் தொட்டார்; கைசுட்டுக் கொப்பளித்தது; 45 நாள் வருந்தினர். முடிவில் ஒரு தடித்த கண்ணாடிக் குப்பியில் அணுவளவு ரேடியம் வைத்து ஒத்தவே புண் ஆறிப்போனது! ரேடியம் அடங்கிய கண்ணாடிக் குப்பியை நீண்ட நேரம் பிடித்திருந்தாலும் கை வெந்துபோகும். ஒரு தரம் அறிஞர் பெக்கெரெல், சிறிதளவு ரேடியத்தைக் கண்ணாடிப் புட்டியில் கவனமாக அடக்கம்செய்து சட்டைப் பையில் போட்டிருந்தார். அதன் வெப்பம் அவரைத் தாக்கிச் சுட்டுவிட்டது. உடனே மேரிகூரியிடம் ஓடிவந்து "பார், உன் துஷ்டக் குழந்தை என்னைச் சுட்டுவிட்டது!" என்று காட்டிச் சிரித்தார். அந்த அனுபவத்தை அவர் உடனே பத்திரிகைக்கு எழுதினர்.

பியர்கூரி பிராணிகளுக்கு ரேடியத்தைப் பயன்படுத்திப் பார்த்தார். அவற்றிற்கு வரும் கட்டிகளும் புண்களும் அதனல் உடனே நீங்கின. ஃபிரெஞ்சு வைத்தியர்கள் ரேடியத்தைச் சோதித்து "அது, தோற்பிணிகளுக்குக் கைகண்ட மருந்து" என்று கண்டனர். ஆஸ்பத்திரிகளில் ரேடியம் பரவியது. ரேடிய சிகிச்சைக்குக் கூரி சிகிச்சை (Curie therapy) என்று பெயரிட்டனர். ரேடியம், ஸயன்ஸ் விநோதம் மட்டுமன்று, மனித சமுதாயத்திற்கே அவசியமானது. அது பெரியதொரு வியாபாரச் சரக்கானது. ரேடியம் தொழிற்சாலை எழுந்தது. பௌதிகப் பள்ளிக்கூடக் கொட்டகையில் எட்டு டன் பிட்ச்ப்ளெண்டை வடிகட்டி இறுத்ததில் ஒரு கிராம் ரேடியமே கிடைத்தது. அதை மேரி அப்படியே வைத்

திருந்தாள். வெள்ளைக்கார மூளை எதைக் கண்டுபிடித்தாலும், அதை வளர்த்து வெள்ளியும் பொன்னும் குவிக்கப் பார்க்கும். உடனே 'நீ, நான்' என்று தொழிற் செல்வர் ரேடியம் தொழில் நடத்த முன் வந்து முதல் போட்டனர். ஸயன்ஸ் கழகம் கூரிகளின் அறிவாராய்ச்சியையும், அயரா உழைப்பையும் போற்றி 20,000 ஃபிராங்குகள் சன்மானமளித்தது. தன் ஆராய்ச்சிப் பயனை மேரிகூரி தனக்கே வைத்துக் கொள்ளவில்லை. நினைத்தால் அவள் அதை இரகசியமாகப் பாதுகாத்து, தானே ரேடியம் செய்து, குபேரச் செல்வம் குவிக்கலாம். அவள் குறிப்பு செல்வமன்று, மனித சமுதாயத்தின் பெருநலமே! ஆதலால், மேரிகூரி ரேடியம் செய்யும் வகையைத் தெளிவாக எழுதி அச்சுப் போட்டு உலகெல்லாம் பரப்பினாள். அவளிடம் சுயநலமே கிடையாது. எத்தனையோ தொழிலாளர் ரேடியம் செய்ய முனைந்து செல்வங் குவித்தனர். மேரி மட்டும் இறுதிவரையில் எளிய வாழ்வே வாழ்ந்தாள்; ஓயாமல் ஆராய்ச்சி நடத்தினாள்.

> "ரேடியம் உப்பு—கதிரிப்பொருள்—
> புண்களை ஆற்றும் அற்புதமான மருந்து"

என்று விளம்பரங்கள் பறந்தன. ரேடியம் விலையோ, ஒரு கிராம் 75,0000 ஃபிராங்கு! வியாபாரிகளுக்குக் கொழுத்த ஊதியம்!

# 10. டாக்டர் பட்டம்

"டாக்டர்" பட்டத்திற்கே மேரி இந்த ஆராய்ச்சி தொடங்கினள். இதோ பட்டம் தேடி வருகிறது! 25-6-1903: மேரி கூரிக்கு 'டாக்டர் பட்டம்' வழங்க அறிஞர் சபை கூடியது. கூரியம்மாள், "கதிரிப் பொருள்கள்" (Radio-Active Substances) என்ற அரிய ஆராய்ச்சிக் கட்டுரையை முறைப்படி அனுப்பியிருந்தாள். சிறந்த அறிஞரான லிப்மான் (Lippman), பூடி (Bouty), முவோசான் (Moissan) ஆகியோர் மூவரும் சர்வகலாசாலே சம்பிரதாயப்படியே மேரியை அறிஞர் சபையில் கேள்வி கேட்டனர். மேரி கையில் சீமைச் சுண்ணம்பை வைத்துக்கொண்டு, கரும்பலகையில் எழுதி விளக்கி, மளமள வென்று பதில் சொன்னள்; தனது சித்தாந்தத்தை ஒட்டிய கணக்குகளே வெகு தெளிவாகப் போட்டுக் காட்டினள். அறிஞர் மகிழ்ந்து போற்றினர். "மேரி கூரி அம்மையே, பாரிஸ் சர்வகலாசாலே, மிகவும் பெருமையுடன் தங்களுக்கு டாக்டர் பட்டம் வழங்குகிறது. தங்களேப் 'பெருந்தகை அறிஞை' என்று சிறப்பாகப் போற்றுகிறது" என்ருர் லிப்மான். சபையில் பலமான கைதட்டல்! மேரியின் கணவனும் தமக்கையும் உறவினரும் அக்காட்சியைக் கண்டு பூரித்தனர். பட்டத்திற்குரிய பதக்கமும் பத்திரமும் தருகையில், "இதெல்லாம் சம்பிரதாயம்; தங்கள் தகுதி அளவற்றது" என்ருர் லிப்மான்.

இதற்குப் பிறகு கேட்க வேண்டுமா? உலகெல்லாம் பியர் - மேரி கூரிகள் புகழ் பரந்தது! ஐரோப்பா, அமெரிக்கா நாடுகளிலிருந்து அறிவாளிகளும் தொழில் முதலாளிகளும் வந்து மரியாதை செய்தனர். பட்டம் பதக்கம் பதவிகள் எல்லாம் வந்து குவிந்தன. 1898 முதல் 1933 வரையில், மேரி கூரிக்குக் கிடைத்த உயர்ந்த வெகுமானங்கள் 8, பதக்கங்கள் 16; பட்டங்கள் 108! இவற்றுள் 1906ஆம் ஆண்டு வரையில் கூரி-மேரி இருவருக்கும் சேர்ந்து கிடைத்த பட்டங்கள் சிலவாம். எல்லா வெண்ணாடுகளும் கூரி தம்பதிகளை வணக்கமுடன் போற்றிக் கொண்டாடின.

1903-ஆம் ஆண்டு இலண்டன் ராயல் நிலயம் (Royal Institute) கூரி தம்பதிகளை வரவேற்றது. முதுபெரும் புலவர், பௌதிகமணி லார்டு கெல்வின், அவர்களை மிகவும் அன்புடன் உபசரித்தார்; தமது ஆராய்ச்சிச் சாலையைக் காட்டினார்; கூரியின் தோளில் கைபோட்டுக்கொண்டு மிகவும் பிரியமாக அவர்களைப் பொதுக் கூட்டத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே, ஆங்கில நாட்டின் அறிஞரும் பிரபுக்களும் கூடியிருந்தனர். பொன்மணி அணிகள் மின்னிடும் மாதர், மேரி கூரியைப் புன்னகை குலுங்க நல்வரவேற்றனர். கூரிதம்பதிகள் தமது ஆராய்ச்சியைப் பற்றிப் பேசினர், ராயல் நிலய வெகுமதிகளைக் கெல்வின் பிரபுவே கூரிதம்பதிகளுக்குத் தந்தார். தேவார் (Dewar) என்னும் அறிஞர், உதவியால் பியர் கூரி தம் ஆராய்ச்சிகளை ஆங்கிலத்தில் வெளியிட்டார். மறு முறை பியர் கூரியை வரவழைத்து ஆங்கில அறிஞர் சபை, "டேவி" என்பவர் ஏற்படுத்

திய பதக்கம் (Devey's Medal) அளித்தது. அப்பெரிய தங்கப் பதக்கத்தை மேரி, ஈரேன் கழுத்தில் தொங்க விட்டாள். பட்டம் பதக்கம் கூட்டம் விருந்து— இவற்றில் கூரிகளுக்கு ஆசையில்லை ; “ பியர், இந்தக் காலத்தை ஆராய்ச்சியில் செலவிட்டால் பயனுண்டே!” என்றுள் மேரி. “ இலண்டனில் பெண்கள் அணிந்த நகைகளை யெல்லாம் மாற்றி ஆராய்ச்சிச்சாலை கட்டினுல் எவ்வளவு பயனுகும் ! ” என்ருர் கூரி.

# 11. நோபெல் வெகுமதி

ஐரோப்பிய வெகுமானங்களுட் பெரியது நோபெல்வெகுமதி. ஸ்வீடன் ஸயன்ஸ் கழகத்தார், அந்த ஆண்டு பௌதிக நோபெல் பரிசில் பாதியை, யுரானியம் பெக்கெரெலுக்கும், பாதியை ரேடியம் கூரிகளுக்கும் தரத் தீர்மானித்துத் தந்தியடித்தனர். 14-11-1903-ல், காரியதரிசியின் கடிதமும் வந்தது. அதில், "10-12-1903-ல் ஸ்டாக்கோமில் கூடும் அறிஞர் சபைக்கு வர வேண்டும்; பிறகு, ஆறு மாதம் கழித்துக்கூடும் வித்வத் சபையில் இருவரும் வந்து ரேடியத்தைப் பற்றிப் பேசி எங்கள் வெகுமானத்தைப் பெற வேண்டும்" என்று கண்டிருந்தது.

"தங்கள் அன்பிற்கும் வெகுமானத்திற்கும் வந்தனம். நாங்கள் அறிஞர் சபைக்கு வரச் சௌகரியமில்லாமல் இருக்கிறது. மேரிக்கு உடல் நலமில்லை. கலாசாலை வேலையும் ஆராய்ச்சி வேலையும் ஓய்வளிப்பதில்லை. ஆதலால், பின்னுல் ஒரு தேதி குறிப்பிட்டு வெகுமானத் தொகையைப் பெற்றுக் கொள்ளுகிறோம்!" என்று பியர் கூரி பதில் எழுதினர்.

இச்சமயம் மேரிகூரி கருத்தரித்தாள். உடம்பு தளர்ந்து போனது. பியர் கூரிக்கும் வாயு நோய். இவ்வாறிருந்தும் இருவரும் வீட்டு வேலை, பள்ளிக்கூடவேலை, இரண்டையும் கவனித்துவந்தனர். ஆனல் ஆராய்ச்சிக்குச் சிறிதும் நேரமில்லை. என்? மேரி கூரி எழுதிய குறிப்புகளைப் பாருங்கள் :

"நோபெல் வெகுமதி வந்ததும் போதும்; எங்கள் பெயரை உலகறிந்ததும் போதும்! நாங்கள் ஸ்டாக்கோம் எப்போது சென்று பிரசங்கம் செய்து வெகுமதிப் பணம் 70,000 ஃபிராங்குகள் பெற்றுக்கொள்வோமோ தெரியாது. எங்கள் பெயரை உலகறிந்து இரண்டு மாதமாகவில்லை; அதற்குள் மூச்சுவிட நேரமில்லாமல் கூட்டம் வருகிறது. தந்திகள் வந்து குவிகின்றன. கடிதங்கள் கட்டுக்கட்டாகக் கிடக்கின்றன; பதில் எழுத முடியவில்லை. விடிந்தெழுந்தால் பத்திரிகை நிருபர்கள், வீட்டை வளைத்துக்கொள்ளுகிறார்கள்; கட்டுரை கேட்கிறார்கள்; படம் பிடிக்க நூறு பேர் குறிவைத்துக் கொண்டிருக்கிறார்கள்; கையெழுத்திற்குப் புத்தகங்கள் குவிகின்றன; பேட்டி காண அறிவாளிகள் வருகின்றனர். ஆவலாகக் கேள்வி கேட்க ஆயிரம் பேர் வருகின்றனர். விருந்துகளுக்கு அழைப்பு வருகிறது; பிரசங்கங்களுக்கும் பல நாடுகள் வருந்தி அழைக்கின்றன. சில சர்வ கலாசாலைகள் பட்டம் பதவி தந்து தொண்டு செய்யச் சொல்லுகின்றன. என்னைப் பற்றிய கட்டுரைகள் பக்கம் பக்கமாகப் பத்திரிகைகளில் வருகின்றன. பாடல்கள் வருகின்றன. என் பெயரைத் தங்களுக்குப் பிரியமான பொருள்களுக்கு வைத்துக்கொள்ளச் சிலர் உத்தரவு கேட்கிறார்கள்!............ஆ, எதற்கென்று ஈடுகொடுப்பது! எனக்கா, உடம்பு சரியில்லை; கடிதங்களைப் பார்க்கக்கூட நேரமில்லை: கட்டிப் போட்டு விட்டேன். அநாவசியமான கடிதங்களுக்குப் பதில் எழுதுவதில்லை; கையெழுத்துக் கொடுப்பதில்லை; விருந்து, பிரசங்கம் எதற்கும் செல்வதில்லை என்று தீர்மானித்து விட்டோம். அமெரிக்காவிற்கு

அழைத்தனர். அழைப்பை மறுத்தோம். அமைதி கெட்டுப் போனது; ஆராய்ச்சி திகைத்து நிற்கிறது. இனி நிலையான வேலை செய்ய முடியாது போலிருக்கிறது. எங்காவது காட்டுத் தனிமையில் ஓடி ஒளிந்தாலே, கூட்டத்தொல்லையில் மாட்டிக்கொள்ளாது தப்பலாம். நாங்கள் அடிக்கடி உடைகளை மாற்றிக்கொண்டு குக்கிராமங் களுக்குப் போகிறோம். 'தப்பினோம்!' என்று நிம்மதியாக இருக்கும்போது, அங்கும் அடையாளந் தெரிந்துகொண்டு நிருபர் வருகின்றனர். அவர்களுக்கு ஒரே வரியில் பதில் தருகிறேன். என்னை கிரிஸ் மன்னருக்கு அறிமுகப்படுத்துவதாகச் சீமாட்டியொருத்தி வந்தாள். "மன்னர் அறிமுகத்தால் எனக்கென்ன பயன்? சிரமப் படாதீர்கள்' என்றேன்"

இவ்வாறு, நிம்மதியைக் கெடுத்தது வெகுமதி! பேரும் புகழும் நேரத்தைக் கெடுத்தன!

ஆனால், புகழ் வந்த பிறகு கூரிகளுக்கு அறிஞர் பலர் நட்புக் கிடைத்தது. பாரிஸ் பல்கலைக் கழகம், பியர்கூரிக்கு பௌதிகப் பெரும் புலவர் ஸ்தானத்தைத் தந்தது. பரிசுகளும் சன்மானங் களும் வந்து குவிந்தன. கல்விச் செழிப்பால் செல்வம் செழித்தது. வீட்டு வேலைக்கு வேலையாட்கள் ஏற்பட்டனர். இவ்வளவு சிறந்தும், கூரி தம்பதிகள் சாதாரண உடையுடன் எளிய வாழ்வே வாழ்ந்தனர்; பழைய ஈருருளியிலே தான் சென்றனர்.

6-12-1904-ல், கூரியம்மைக்கு ஓர் அழகான பெண்குழந்தை பிறந்தது. அதற்குப் பெயர் ஈவ்கூரி.

10-12-1903-ல், ஸ்டாக்ஹோம் ஸயன்ஸ் சங்கம் நோபெல் வெகுமதி அடைந்தவரை மரியாதை செய்யக்கூடியது. ஆனால், கூரி தம்பதிகள் செல்ல முடியவில்லை. ஃபிரெஞ்சுக் குடியரசு மந்திரி சென்றிருந்தார். அவரிடம் ஸ்வீடன் அரசர் கூரிகளுக்கு உரிய நோபெல் வெகுமதிப் பட்டயமும் பொற்பதக்கமுந் தந்தார். அவர் பாரிஸுக்கு வந்ததும், கூரி தம்பதிகளிடம் அவற்றைச் சேர்த்தார். ஒருமுறையாவது வந்து பிரசங்கம் செய்யும்படி ஸயன்ஸ் சங்கம் வருந்தி அழைத்தது. 6-6-1905ல் தான் அவகாசம் கிடைத்தது. கூரிகள் குடும்பத்தோடு ஸ்டாக்ஹோம் சென்றனர். பியர்-கூரி ரேடியத்தைப்பற்றி அரிய பிரசங்கம் செய்தார். மேரிகூரி அதன் பயனை விளக்கினாள். அறிஞர் மெச்சினர். ஸ்வீடிஷ் மக்கள் இருவரையும் அன்புடன் போற்றினர். அந்நாடு கூரிகளுக்குப் பிடித்திருந்தது. இருவரும் சில நாட்கள் அதைச் சுற்றிப் பார்த்துத் திரும்பினர்.

# 12. அறம் புரிந்தாள்

கூரி தம்பதிகளுக்குப் பதவிக்குமேல் பதவி, பட்டத்தின்மேல் பட்டம், பணத்தின்மேல் பணம் வந்து குவிந்தன. அந்த நிலையிலும் அவர்கள் ஆடம்பரத்தை விரும்பவில்லை; மிகவும் அடக்கமாகவே யிருந்தார்கள். ஒரு பெரிய ஆராய்ச்சிச்சாலை கட்டி, இன்னும் பல புதுமைகள் காணவேண்டும், மாணவரைப் பயிற்ற வேண்டும், என்பது பியர் கூரியின் ஆசை! சீமாட்டி யொருத்தி, தானே அதற்கு வேண்டிய கட்டிடச் செலவு தருவதாகவும் முன்வந்தாள். ஆனால், அஃது உடனே பலிக்கவில்லை. எட்டாண்டுகளுக்குப் பிறகே கூரியம்மை சொந்தமான ஆராய்ச்சிச்சாலை கட்டினாள். இருப்பினும், இருவருக்கும் சரியான இடம் கிடைத்தது. இனிப் பழைய பள்ளிக்கூடக் கொட்டகை தேவையில்லை. பியர்கூரி இப்போது பாரிஸ் சர்வகலாசாலையில் உயர்ந்த பௌதிகப் பீடம் வகித்து, மிகப் பெரிய ஆராய்ச்சிக் கூடத்தை நிர்வகித்தார். 1-11-1904-ல் கலாசாலை அதிகாரிகள் டாக்டர் கூரியம்மாளை அவருக்குத் துணையாக நியமித்தனர். சம்பளம் 2400 ஃபிராங்குகள். அவளுக்குத் துணையாக இன்னும் இரண்டு புலவர் இருந்தனர். ஆதலால், இனி நாளெல்லாம் ஆராய்ச்சி நடத்தலாம். "நானும் கூரியம்மையும், சர்வகலாசாலையில் ஏராளமான வசதியுடன் பௌதிக ஆராய்ச்சி நடத்துகிறோம். ரேடியக் கதிர்களையும், அவை யுமிழும் காற்றையும் பற்றி நுட்பமாக ஆராய்ந்து வருகிறோம். நாங்கள்

காலத்தை மிச்சம் பிடித்து, எங்கள் கருமமே கண்ணாக இருக்கிறோம்" என்று பியர்கூரி எழுதுகிறார். இருவரும் கலைக்கே உயிர்த்தனர். சர்வகலாசாலை விருந்து, புலவர் விருந்துகளுக்கே தீராப் பொறியாகச் சென்றனர். சிறந்த புலவர்களைத் தமது மனையில் வரவேற்று, அன்புடன் உபசரித்தனர். அபூர்வமாக நல்ல சங்கீதம் கேட்க, நடனம் பார்க்கச் செல்வதுண்டு. மற்றைப்படி பேச்சுக்கூட அதிகமிராது. பேட்டி காண வருபவருக்கும் இரண்டொரு வார்த்தையில் பதில் வரும். மாணவர்களுக்குச் சொல்லித் தருவதிலும், ஸயன்ஸ் விஷயமாகக் கேட்பவருக்கு விளக்குவதிலும் இருவரும் உற்சாகங்கொண்டனர்.

கூரியம்மைக்கு ஏராளமான பணம் வந்தது. பணத்தைப் பூட்டிவைக்க அவள் விரும்பவில்லை: பியர் கூரியும் அவ்வாறே. மாணவியா யிருந்த போது தான் பட்ட கஷ்டத்தை அவள் நினைத்தாள்; ஏழை மாணவருக்குத் தாராளமான உதவி செய்தாள். தனது ஆராய்ச்சிச்சாலை மாணவருக்குத் தாய்போல் உதவினாள். பொது நிலயங்களுக்கெல்லாம் இயன்ற உதவி செய்தாள். அவள் நெஞ்சில் எழுந்த நாட்டன்புக் கனல் வளர்ந்துகொண்டே யிருந்தது. போலந்து, ஃஜாரின் கொடுங்கோலில் வருந்துவதை எண்ணி எண்ணி அவள் உள்ளம் வீரப் பொரி தெறித்தது. போலந்திலிருந்து வரும் மாணவருக்கும் மாணவிகளுக்கும் அநாதைகளுக்கும் அவள் பரிவுடன் துணை புரிந்தாள். அச்சமயம் போலந்தில் ஒரு விடுதலைக் கிளர்ச்சி எழுந்து, மறைமுகமாக ஃஜார் கொடுங்கோலை வீழ்த்த வேலை செய்தது; அதே சமயத்தில் லெனினும் அதே நோக்கத்துடன் கிளம்பி

ளுன். அண்ணன் ஜோஸெஃபும் விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்டிருந்தான். மேரி அவனை ஊக்கினுள். தாய்நாட்டு விடுதலைக்கு இரகசியமாகப் பணம் அனுப்பினுள். 23-3-1905-ல், "நமது தேச விடுதலையை நான் தீவிரமாக விரும்புகிறேன். புரட்சி வீரரை மனமார ஆதரிக்கிறேன். காசிமீர் மூலம் வேண்டிய பணமும், என் யோசனையும் அனுப்புகிறேன்" என்று அண்ணனுக்கு எழுதினுள்.

உலகில் எத்தனையோ பணக்காரர் உளர். பணத்தை இப்படி நல்ல வழியில் அள்ளிவிட்டுத் தாம் எப்போதும் எளிய வாழ்வே வாழ்ந்தவர் அரியர். அவருள் கூரியம்மை முதன்மையாக விளங்குகிருள். அவளிடம் அறிவும், அறமும், அஞ்சா வீரமும் சேர்ந்திருந்தன.

## 13. ஆ, பியர்!

**19-4-1906 :** வியாழன் ; விடாமழை ; இருட்டு ; பாரிஸ் தெருக்களில் சாவு யாரையோ குறிவைத்து நடமாடியது!

பியர்கூரி, "மேரி, ஆராய்ச்சிச் சாலையில் சந்திப் போம்" என்று வெளியே சென்றார். அவசரம், அவசரம்! அச்சுக்கூடத்தில் சென்று தாள் திருத்த வேண்டும் ; ஸயன்ஸ் புலவர்கள் விருந்திற்குச் செல்ல வேண்டும் ; பிறகு, ஸோர்போனில் பாடம் சொல்ல வேண்டும். அச்சுக்கூடம் பூட்டி யிருந்தது ; தோஃபின் தெரு (Dauphine Street) வழியாகப் புலவர் விருந்துக்கு விரைந்தார் பியர் கூரி. ஆ, அப்போது தெருநடுவே வண்டிகள் நெருங்கின! இப்புறம் ஒரு பாரவண்டி ; அப்புறம் ஒரு குதிரை வண்டி! கூரி யின் நினைப்பெல்லாம் ஆராய்ச்சிச்சாலையில் இருந் தது; மூளையில் ஆயிரம் பௌதிக இரசாயனக் கனவு கள் எழுந்தன...ஆ, திடீரென்று வண்டி மோதியது ; குதிரைகள் அவரைக் குப்புறத் தள்ளின; சக்கரங்கள் உடலை நசுக்கின ; தலை துண்டானது! ஒரு நொடி யில் மனித வாழ்வு முடிந்துவிட்டது!

தெருவில் கூட்டம் ; போலீஸ்காரர் ஒரு வண்டி யில் உடலை அள்ளிப்போட்டு, ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றனர். அங்கே பிணத்தின் சட்டை யைக் கழற்றிச் சோதித்தனர். ஓர் ஊற்றுப்பேனா, ஆராய்ச்சிச்சாலைத் திறவுகோல், ஒரு குறிப்பேடு, கடிகாரம்—இவையே இருந்தன. குறிப்பேட்டில்

"பியர்கூரி" என்ற பெயரைக் கண்டபிறகே, "ஆ, இவ்வளவு பெரிய அறிவாளிக்கு இந்தக்கதி வந்ததே!" என்று வைத்தியரும் கண்ணீர் விட்டார். நலிந்த உறுப்புக்களைத் தைத்துச் சரிபண்ணி, இரத்தந் தோய்ந்த உடுப்புகளையும் மேற்சொன்ன சாமான்களையும் மூட்டைகட்டி ஒரு கடிதத்துடன் மேரிகூரி வீட்டிற்கு ஆள்மூலம் அனுப்பினர். அங்கே கூரியில்லை; சர்வகலாசாலைக்குத் தகவல் பறந்தது. கேட்டவர் இடி விழுந்ததுபோலத் திகைத்தனர்; கண்ணீர் விட்டனர். சர்வகலாசாலைத் தலைவர் பால் அப்பெல் (Paul Appel) புலவர்கள் சிலருடன் மேரி கூரிக்குச் செய்திசொல்ல விரைந்தார். வீட்டில் மேரி இல்லை; முதிய மாமனார் டாக்டர் கூரிதான் இருந்தார். அவரிடம் செய்தி சொல்ல முடியாமல். பால் அப்பெல் விசன முகங்காட்டித் திகைத்து, "உ, உ புலவர் கூரி" என்று விம்மி யழுதார். "ஆ, என் மகன் இறந்தானா?" என்று கிழவர் துக்கத்தில் ஆழ்ந்தார். அச்சமயமே மேரிகூரி குழந்தைகளைத் தோட்டத்தில் விளையாட விட்டுத் திரும்பிவந்தாள்.

புலவர்கள் தயங்கித் தயங்கி, விம்மி விம்மி, "அம்மா...தங்கள் உயிர்போன்ற பியர்...விஞ்ஞான மணி...பியர்...போய்விட்டார்!...ஹோ ஹோ ஹோ!" என்றழுதனர். மேரிகூரியும் மனம் வெடித்து அழுது புரண்டு தவிப்பாள் என்றே எல்லாரும் எதிர்பார்த்தனர். கூரி ஐந்து நிமிஷம் அசையாதிருந்தாள். பிறகு மெல்லிய குரலில், "ஆ பியர் இறந்தாரா? இறந்தாரா? உண்மைதானா?" என்றாள். அழவில்லை: புலம்பவில்லை. ஆஸ்பத்திரியிலிருந்து பிணம் வந்தது; அதை அவள் கூடத்தில் வைக்கச் செய்து, மலர்களால்

அலங்கரித்தாள்; சவப்பெட்டியில் தூக்கி வைத்தாள். அதற்குள் செய்தி உலகெலாம் பறந்தது. எட்டுத் திசையிலிருந்தும் புலவர் மணிகள் அனுதாபத் தந்தி யடித்தனர். "கூரி சாவு கேட்டுத் திகைத்து வருந்தி னேன். நாங்கள் சாவுச் சடங்கிற்கு வருகிறோம்" என்று பிரபு கெல்வின் தம்பதிகள் தந்தி யடித்தனர். "ஐயோ, நான் ஓர் அருமைச் சகோதரரை இழந் தேனே! கொடிய சாவு, பெரிய நஷ்டம்! தங்க ளுடன் நானும் வருந்துகிறேன்" என்றார் புலவர் லிப்மான். "விஞ்ஞான வுலகே விரிச்சென்று தோன்றிற்று! பெருந்தகைப் புலவர்மணி! ஆயுளெல் லாம் ஆராய்ச்சியிலேயே செலவிட்டுத் தொண்டு செய்தவர்" என்று எத்தனையோ புலவர் எழுதினர். இசை மாலைகள் வந்து குவிந்தன. மேரிகூரி உள் ளாழ்ந்த சிந்தனையுடன் மௌனமாகவே யிருந்தாள். புலவர் புடைசூழப் பாடை மயானத்திற்குச் சென் றது; கல்லறையுள் பியரின் சவப்பெட்டி இறங்கி யது; மேரி கூரி, கணவன் உடலுக்கு மலர் தூவி னாள்; மௌனமாக வீடு சென்றாள். அதனோடு சடங்கு முடிந்தது.

வீடு விரிச்சென்றிருந்தது; கணவர் உருவம் மனைவிமுன் அடிக்கடி வந்தது. அவர் அன்பு அவளுள் ஐக்கியமாகி விட்டது. மேரி, ஒரு தனி அறைக்குட் சென்று, கதவை மூடிக்கொண்டாள். அவ்வறையில் கணப்புத் தீயும் இருந்தது. பியர் அணிந்து, இரத்தக் கறைப் பட்டுப் பிய்ந்த சட்டையை கத்தரித்துத் தீயிற் போட்டாள். "இந்தச் சட்டைபோலத் தானே என் உடலும் ஒருநாள் அழியும்!" என்றாள். பிறகு தன் னுள்ளே பேசிக்கொண்டாள்: "என் அருமை பியர்,

நான் உன்னை மறப்பேனு? நீ உடலை உதறிவிட்டு என்னுள் இருக்கிருய். என் கடமையென்ன? அழுவதா? அழுதென்ன? இறந்தார் வருவரோ? நான் இனிச் செய்யவேண்டியது உன் கடமையே. உன் ஆவியின் ஆசை, ஒரு பெரிய ஆராய்ச்சிச்சாலை கண்டு, மாணவர்களுக்கு விஞ்ஞானப் பயிற்சி தருவதே; அதை நான் செய்து முடிப்பதே உனக்கு உண்மையா யிருப்பதற்கு அறிகுறி" என்று உறுதி பூண்டாள். நாயகன் தன்னுள் இருப்பது போலவே பாவித்தாள்; பெற்ற குழந்தைகளை அன்புடன் போற்றினுள். மாமனுர் டாக்டர் கூரி, "அம்மா, மேரி உனக்கு இவ்வளவு துக்கம் வந்தது. இனி நீ விருப்பப்படி இருக்கலாம். இந்தக் கிழவனுடன் இருக்கப் பிரியமானுல் இரு! இன்றேல், வேருெரு வீடமர்த்திக் கொடுக்கிறேன். எங்கிருந்தாலும் குழந்தைகளை நான் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்ருர். "தாங்கள் பெரிய துணையாக என்னுடனேதான் இருக்கவேண்டும்; எனது அருமைக் கணவரின் தந்தைக்கு நான் பணிவிடை செய்யவேண்டும்" என்ருள் மாட்டுப் பெண். தாத்தா, பேத்திகளுடன் விளையாடிக்கொண்டு கவலை யற்றிருந்தார். கூரி அந்த வீட்டை விட்டு வேருெரு வீடு வாடகைக்குப் பிடித்தாள். அதில் தோட்டமிருந்தது. குழந்தைகளுக்குத் தோட்டத்தில் பூஞ்செடி போட்டு விளையாடவும், தேகப்பயிற்சி செய்யவும் வசதி செய்தாள். அவர்களுக்குத் தக்க கல்வியும் ஒழுக்கமும் வளரச் செய்தாள். குழந்தைகள் சிலநாள் பள்ளிக்கூடம் சென்றனர். தாயே குழந்தைகளுக்கு ஸயன்ஸ் சொல்லித் தந்தாள். அவர்களும் சிறு சிறு கருவிகள் செய்தனர். ஸெவிஞ்ஞே

கல்லூரியில் அவர்களைச் சேர்த்து முதல்தரமான கல்வி புகட்டி மேதாவிகளாக்கினாள். மூத்த பெண் ஈரான் ஸயன்ஸ் புலமை பெற்றாள். அடுத்த பெண் ஈவ், சங்கீதத்தில் புலமை பெற்றாள்.

டாக்டர் கூரி, பேத்திகள் வளர்வதைக் கண்டு மகிழ்ந்து, ஒருநாள் சட்டையை உதறிச் சென்றார். அவர் உடலைத் தன் கணவர் கல்லறையிலேயே புதைத்து மேரி மலர் தூவினாள்.

மேரிகூரி துக்கத்தை ஊக்கமாக மாற்றினாள்; தனிமையைக் கல்வியால் இனிமை செய்தாள்; கணவர் நினைவைக் கலைப்பணியால் வளர்த்தாள்.

## 14. பெரும்புலவர் பீடம்

பியர் கூரியின் சாவு சர்வகலாசாலையை வருத்தியது.

அவர் குடும்பத்திற்கு உபகாரச் சம்பளம் தருவ தாக அதிகாரிகள் முன்வந்தனர். "நான் என் குடும்பத்தைச் சம்பாதித்தே காப்பாற்றுவேன்; எனக்கு உபகாரச் சம்பளம் வேண்டா" என்று மறுத்துவிட்டாள் கூரியம்மை.

பியர்கூரியின் பீடத்திற்கு ஒரு புலவரை நியமிக் கக் கழகத்தார் கூடிச் சிந்தித்தனர்; டாக்டர் மேரி கூரியே அந்தப் பீடம் வகிக்கத் தகுந்தவள் என்று தீர்மானித்தனர். உடனே மேரி கூரிக்கு இவ்வாறு அழைப்பு வந்தது:—

> "டாக்டர் கூரியம்மையே, தங்களைப் பியர் கூரியின் பீடத்திற்குச் சர்வ கலாசாலை நியமிக் கிறது. 1906-ஆம் ஆண்டு மே மாதத்திலிருந்து வருஷச் சன்மானம் 10,000 ஃபிராங்குகள். தயவு செய்து ஒப்புக்கொள்ள வேண்டும்."

மேரி கூரி தன் கணவன் பணியைத் தொடர்ந்து நடத்தவே, அப்பீடத்தில் அமர்ந்தாள், அதில் அமர்ந்த முதற்பெண் அவளே. உலகெல்லாம் அச் செய்தி பரவியது.

முதல்நாள், ஸோர்போன் பௌதிக வித்யா பீடத்திற்கு மேரிகூரி வரப்போகிருள். அவள் பேச் சைக் கேட்பதற்கு அறிஞர் ஏராளமாகக் கூடினர். அம்மையார் முதலில் தம் கணவரைப்பற்றி உருக்க

மாகப் பேசுவாரென்று எல்லாரும் எதிர்பார்த்தனர். ஒன்றரை மணி; கீழுள்ள கதவு திறந்தது. கூரி யம்மை தோன்றினுள்; ஸோர்போன் புலவருக் கென்று ஒரு சட்டை யுண்டு: அதைத் தரிக்காமல், மேரி சர்வ சாதாரணமான கறுப்புடை தரித்து வந்தாள். அவள் புலமைக்காக அதையும் அதிகாரிகள் அனுமதித்தனர். சபையைப் பார்க்கவில்லை; 'ஹா ஹா' என்று தொண்டையைக் கிளப்பிப் பிரசங்கம் செய்யவில்லை; தலை குனிந்தவாக்கில், "பன்னிரண்டாண்டுகளாக அவர் பௌதிக ஆராய்ச்சி நடத்தி, மின்சாரத்திலும், கதிரியக்கத்திலும் பல புதுமைகளைக் கண்டார். அவற்றைத் தொடர்ந்து நடத்துவது நமது கடமை" என்ருள். அவ்வளவு தான்......கணவரைப்பற்றி! பிறகு, மளமளவென்று அன்றைய பாடத்தை நடத்தினுள்; மின்சாரத்தைப் பற்றியும், அணுச்சிதைவைப் பற்றியும் விரிவாக விளக்கினுள். பாடம் முடிந்தது; மணி யடித்தது; உடனே மேடையினின் றிறங்கி, மின்னெனச் சென்ருள். "மேரிக்குக் கண் காரியத்தில்" என்று எல்லாரும் வியந்தனர்.

மேரிகூரி மாணவருக்குக் கருத்துடன் கற்பித்தாள்; அவர்கள் எக்கவலையு மில்லாமல் இயற்கலை ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்தாள். அவளிடம் படித்த மாணவர் நல்ல நிலைக்கு வந்து புகழ்பெற்று விளங்கினர். "கூரி, ஆராய்ச்சிச் சாலையில் சந்திப்போம்" என்று பியர் கூரி விடைபெற்றுச் சென்ருரன்ருே? மேரிகூரி வகுப்பிற்கு வரும்போது, கணவருடன் இருப்பதாகவே சிந்திப்பாள்; அவரே, தன் மூலம் போதிப்பதாகக் கருதுவாள். உலகெங்கும்

எல்லா நாடுகளும் ரேடியம் அறிவை அவளிட மிருந்தே பெற்றது. அவள் அதைப்பற்றி எத்தனையோ வகுப்புகள் நடத்தினாள்; பிரசங்கங்கள் செய்தாள். முடிவில் 1908-ஆம் ஆண்டு பியர் கூரியின் கட்டுரைகளெல்லாம் திரட்டி "பியர்கூரி நூல்" ஒன்று வெளியிட்டாள். அதில், தன் கணவர் வரலாற்றை அவள் மிக உருக்கமாக எழுதினாள்; "அவர் பழுத்த விஞ்ஞானி; மாபெரும் புலவர்; வாழ்வெல்லாம் பௌதிக ஆராய்ச்சி யாக்கிப் பல புதுமைகளைக் கண்டவர்; இன்னும் எத்தனையோ புதுமைகளைக் கண்டு, மனித சமுதாயத்திற்கு உதவ அவர் உள்ளம் துடித்தது. ஆனால், விதியின் உள்ளம் திடீரென்று அவரை மறைத்துவிட்டது. இருந்தாலும் அவரை உலகம் மறக்க முடியாது; அவர் சிந்தனைகள் வீணாகா!" என்று குறித்தாள். 1910-ஆம் ஆண்டு "Radio activity" (கதிரியக்கம்) என்ற பெரிய நூல் ஒன்று எழுதினாள்; 977 பக்கம்; அதையும் கணவருக்கே அர்ப்பணஞ் செய்தாள்.

ரேடியம் மனித வாழ்விற்குத் தேவையான பொருளானதும், மேரிகூரியின் பெயரும் உலகப் புகழ்பெற்றுப் பரவியது. அமெரிக்கச் செல்வரும், ஐரோப்பியச் செல்வரும், அவளுக்கு ஏராளமான செல்வம் அளித்தனர். அத்தனையும் அவள் ஏழை மாணவருக்கும், ரேடியம் ஆராய்ச்சிக்கும், பியர்கூரி நினைவிற்காக ஆராய்ச்சிச்சாலை கட்டவுமே செலவிட்டாள்: தனக்கென்று எதையும் வைத்துப் பூட்டவில்லை. தன் மக்களுக்கும் கல்வியையே செல்வமாகத் தந்தாள்! அவர்களும் அவளிடமே கற்றனர்.

## 15. பொறாமைப் புயல்

உலக வாழ்வில், புகழ் ஒருபுறமானால், பொறாமை மறுபுறம் கிளம்பி வம்பு செய்வதைக் காணலாம். மேரிகூரி எவர் வம்புக்கும் போவதில்லை; யாரைப் பற்றியும் பேசுவதில்லை! ஆராய்ச்சி உண்டு, அவளுண்டு; பட்டம் பதவிமோகங்கூட அவளுக்கு இல்லை. *1910*-ஆம் ஆண்டு ஃபிரெஞ்சுக் கழகம் அவளுக்குப் பெருந்தகையாளர் (La Legion d' honneur) பட்டமும், வீரப்பதக்கமும் அளித்தது. "இவற்றால் என் காரியத்திற்கு ஒரு பயனும் இல்லை" என்று இரண்டையும் மறுத்தாள் மேரி; தன் கணவர் முன்னே டாக்டர் பட்டத்தை மறுத்ததை அப்போது நினைத்தாள். இதே மாதிரி தேடிவந்த எத்தனையோ பட்டங்களை அவள் பாராட்டவில்லை.

இவ்வளவு அடக்கமாக இருந்தும், வலிய பகைவர் சிலர் எழுந்தனர். "ஹூம், ஒரு பெண்பிள்ளை புலவர் பீடம் வகிப்பதா, எம்மைப்போன்ற ஆண் சிங்கங்கள் இருக்கும்போது?" என்று சிலர் கொக்கரித்தனர்; பத்திரிகையில் கிளர்ச்சி செய்தனர்; மேடை அதிரப் பேசினர். மேரிகூரி இந்த வசைப் புயலுக்கெல்லாம் அசையவில்லை; வாயைத் திறக்கவில்லை; தன் காரியத்திலேயே கண்ணாயிருந்தாள். *1911*-ஆம் ஆண்டு ஸயன்ஸ் கழகத் தேர்தலின்போது, அவள் பெயரும் வந்தது. "பெண்களுக்கு இடந் தராதீர்!" என்று கூச்சலிட்டு எதிரிகள் அவளைத் தேர்ந்தெடுக்கவிடாது செய்தனர். அதனாலும் அவள்

கலங்கவில்லை. அந்தக் கூட்டத்திற்கே போகவில்லை. உள்ளூர்ப் பகைவர் அவள் புலமையை அடக்க முடியவில்லை. அவள் ரேடியக் கதிர்களைப்பற்றிப் பயனுள்ள புதிய இரசாயன ஆராய்ச்சி செய்தாள். அதற்காகவும், அவள் புலமைக்காகவும் ஸ்டாக்கோம் ஸயன்ஸ் சபை 1911-ஆம் ஆண்டு அவளுக்கு இரசாயன நோபெல் வெகுமதியை முழுதாகத் தந்தது. உலகில் இரண்டு தரம் நோபெல் வெகுமதி வாங்கியவள் அவளே! இந்தத் தடவை மேரிகூரியே தன் மகளுடன் சென்று ஸ்வீடன் அறிஞர் சபையில் பேசி, அரசர் கையிலிருந்து நோபெல் பட்டமும் பரிசும் பெற்ருள். அப்போதும் அவள் கணவனையே சிந்தித்தாள். "என் கணவர், மகா மேதாவி; அவருடன் சேர்ந்தே நான் ரேடியம் கண்டுபிடித்தேன். இப்போது, இரசாயன முறையால் ரேடியத்தின் கதிர்களைச் சோதித்துப் புதுமை கண்டேன். அதற்கும் என் கணவர் காட்டிய வழியே துணைசெய்தது; ஆதலால், இவ்வெகுமதி பெறும்போது, அவருக்கு நன்றி செலுத்துகிறேன்" என்ருர். எப்படிப்பட்ட பதிவிரதை பாருங்கள்!

எதிரிகள் பொருமை இன்னும் கொழுந்துவிட்டெரிந்தது. "அடே இந்தப் பெண்பிள்ளைக்கு இரண்டு தரம் நோபெல் வெகுமதியா? ஆண்கள்கூட அப்படிப் பெறவில்லையே! இவளை நமது ஃபிரெஞ்சுக் கழகத்திலிருந்து விலக்கவேண்டும்; இவள் அன்னியப் பெண்; போலிஷ்காரி; இவள் கத்தோலிகையன்று. இவள் யூதச்சி" என்று எத்தனையோ விதமாகப் பகைவர் தாக்கினர். "உனக்கென்ன தெரியும்? மரியாதையாக வேலையை விட்டுப்போ!" என்று

மொட்டைக் கடிதங்கள் வந்தன. அவள் உயிருக்குக்கூட ஆபத்து வந்தது. இத்தனை இடர்களோடு உடலும் தளர்ந்தது; இரண்டு மாதம் வைத்தியம் பார்த்து உடல் நலமானது. அவள்மேல் பொய்க் கதைகள் கட்டிவிட்டு எதிரிகள் அவமானப்படுத்த முயன்றனர். பியர்கூரியின் அண்ணன் ஜாக் கூரி, லிப்மான் போன்ற அறிஞர் அவளுக்காகப் பரிந்து பேசினர். 'ஃஜாரின் கீழ் தனது தாய்நாடு படுந்துயருக்கு இத்தொல்லைகள் எம்மட்டு!' என்று மேரி எல்லாம் பொறுத்துக்கொண்டே 'காரியக் குறிப்புடனிருந்தாள். இப்புறம் வசைமாரி; இன்னொரு புறம் இசைமாரி பெய்தது.

இச்சமயம் தேசபக்தர் கிளர்ச்சியால் ஃஜார் கொடுங்கோல் கல்வியைப் பொறுத்தவரையில் சிறிது தணிந்தது. பெண்களும் உயர்ந்த கல்வி பெறலாம்; பட்டம் பெறலாம். போலந்திற்கே மேரிகூரியால் தனிப்புகழ் வந்தது. ஆதலால், 1912-ல் போலிஷ் அறிஞர் பணம் போட்டு ஒரு பெரிய ரேடியம் சாலை ஏற்படுத்தி, அதை நடத்தத் தம் மேரியை அழைத்தனர். ஒரு போலிஷ் அறிஞர் தூதுக்குழு வந்து, "அம்மையே, தங்கள் புலமைப்புகழ் எங்களுக்குப் பெருமை யளிக்கிறது; எங்கள் போலந்து, தங்கள் தாய்நாடு; தாங்கள் பிறந்த வார்சாவிலேயே பெரிய ஆராய்ச்சிச்சாலை நாட்டினோம். இன்று எங்கள் நிலைமை பரிதாபமா யிருக்கிறது; கல்வி மட்டமா யிருக்கிறது; தாங்கள் தயவுசெய்து பிறந்த ஊரையும், தாய் நாட்டையும் காக்க எழுந்தருளவேண்டும்" என்று மன்றாடியது.

மேரி சிந்தித்தாள். பாரிஸில் பகைவர் செய்யும்

தொல்லைகளால் மனம் நொந்த அவள், ஃபிரான்ஸை விட்டுக் கிளம்ப இது சரியான சமயம். தேசபக்தை யான அவள், போலந்து சேவைக்குச் செல்ல விரும் பினாள். ஆனால், தன்னுயிர்க் கணவனுக்குச் செய்ய வேண்டிய ஒரு பெரும் பணி பாரிஸில் உள்ளது: பியர்கூரி ஆராய்ச்சிச்சாலை கட்டுவது. பகைவருக்குப் பயந்து ஊரைவிட்டோடவும் கூடாது. ஆதலால், வார்சாவில் நிலைத்திருக்க முடியாமையைத் தெரிவித் தாள்; "ஆராய்ச்சிச் சாலையைத்திறந்து வைக்கவாவது வாருங்கள்!" என்று தூதர் கெஞ்சினர். 1913-ஆம் ஆண்டு கூரியம்மை வார்சா சென்று, ஆராய்ச்சிச் சாலையைத் திறந்து, அரிய பிரசங்கம் செய்தாள். அதற்கு ரஷ்ய அதிகாரிகள் எவரும் வரவில்லை; அப்பெரிய அறிஞரைக் கௌரவிக்கவுமில்லை— வெட்கம்! மேரிகூரி ரஷ்யக் கொடுங்கோலை உணர்ச்சி ததும்பக் கண்டித்தாள்; வார்சாவில் தான் பழகின நண்பரையும், கற்ற இடங்களையும் பார்த் தாள்; திரும்பி வரும்போது ஜெர்மனியில் அறிஞர் எய்ன்ஸ்டேன் (Einstein) நட்பைப் பெற்றாள். எய்ன் ஸ்டேன், கூரியம்மையை வியந்து போற்றினார்.

## 16. ஆச்சரியமான தியாகம்

**1914-ஆம்** ஆண்டு ஜெர்மன் போர் இரத்தப் புயலாகக் கிளம்பிப் பாரிஸை விழுங்க வந்தது. அச்சமயம் மேரி, தானும் கணவரும் தயாரித்த அந்த ஒரு கிராம் ரேடியத்தை மறைத்துச் சென்று போர்டோவில் ஒரு பாங்கில் பதிவுசெய்து வைத்து வந்தாள். பிறகு, "ஜெர்மனி ஃபிரான்ஸில் நுழைந்துவிட்டது; இருந்தாலும் பயமில்லை; தளரா தீர்கள்; வெற்றி நமக்கே!" என்று தன் மக்களுக்கும் நண்பருக்கும் எழுதினாள். நண்பர்கள் அவள் உடல் நலிவைப் பார்த்து, ஓய்வெடுத்துக்கொள்ளச் சொன்னார்கள். "உலகம் கலங்கி நிற்கையில், எனக்கு ஓய்வேது? இதோ, நானும் தொண்டு செய்வேன்" என்று கூறியம்மை எழுந்தாள்; காயம்பட்டவர்களுக்கு ரேடியம் சிகிச்சை செய்ய முன்வந்தாள்; எக்ஸ்-ரே (X-Ray) தயாரித்து ஆஸ்பத்திரிகளுக்கு உதவினாள்; மோட்டாரில் சென்று நோயாளிகளைப் பரிவுடன் கவனித்தாள். ஜெர்மன் படைகள் பாரிஸில் நுழையப் போவதாகச் செய்தி வந்தும், அவள் கலங்கவில்லை. தன் கடமையை இன்னும் தீவிரமாகச் செய்தாள்; பெண்கள் பலரைத் தன்னுடன் சேவை செய்யத் தூண்டி நடத்தினாள்; அவள் இருபது மோட்டார்களில் மருந்துச் சாமான்களுடன் மின்வேகத்திற் சென்று, காயம்பட்ட வீரருக்குச் சிகிச்சை செய்ய உதவினாள்; எக்ஸ்-ரே வைத்துப் பார்த்து எலும்பு முறிவு, உள்ளே தைத்த குண்டு

முதலியவற்றைக் கண்டுபிடித்து உதவினாள். இவ்வாறு 220 ரேடியம் நிலயங்கள் ஏற்படுத்தி மேரிகூரி ஆயிரக்கணக்கான வீரருக்குச் சிகிச்சை செய்தாள். ஜெர்மன் குண்டு விழுந்த செய்தி எங்கிருந்து வந்தாலும், அங்கே விரைந்து சென்று தொண்டு செய்தாள். தனதுநோயைப் பாராட்டாமல், பிறர்நோய் தீர உதவினாள். "Madame Curie, Directrice of Radiological service" என்று அவள் பெயர் சேனை இலாகாவில் பதிவாயிருந்தது. சில நாட்களுக்குப் பிறகு மேரி கூரி, தன் மூத்த மகள் ஈரானையும் தனக்கு உதவியாக அழைத்து, ரேடியம் சிகிச்சை பயிற்றித் தொண்டு செய்யச் சொன்னாள்; ஈரானுக்கு அப்போது வயது பதினெட்டு. கூரியன்னை அரசாங்க உத்தரவு பெற்று, ஆண் பெண் தொண்டர் பலருக்கு ரேடியப் பயிற்சி யளித்தாள்; அதனின்று எழும் கதிரும், காற்றும், வெப்பமும் தோல் சம்பந்தமான எல்லாப் பிணிகளுக்கும் சஞ்சீவியா யிருந்தன. அமெரிக்கப் படை வீரர் பலருக்கு அவள் ரேடியம் வித்தை பயிற்றினாள். 1914—1918-ல் அவள் தேசத்திற்காகச் செய்த தியாகம் அளவற்றது; அதை வியந்து போற்றாதவரில்லை.

ஃபிரான்சிற்காக அவள் உடலாலும் அறிவாலும் மட்டும் உழைக்கவில்லை; தன் பொருளை யெல்லாம் தேசத்திற்கே தந்துவிட்டாள். அதுவும் எப்படிப் பட்ட பொருளை? நோபெல் வெகுமதியாலும் இன்னும் எத்தனையோ வெகுமதிகளாலும் தனக்குக் கிடைத்த பொருள்களை யெல்லாம் போர் நிதிக்கே மனமாரத் தந்தாள்! அம்மட்டோ? நோபெல் பதக்கத்தையும் பொதுநல சேவைக்கே உதவினாள்;

தனக்கு அறிஞர்கள் பலரும் சங்கங்களும் அருமை யாக அளித்த தங்கப் பதக்கங்களை யெல்லாம் ஃபிரெஞ்சு பாங்கிற்குக் கொண்டுபோனாள். "தயவு செய்து இவற்றை உருக்கி அந்த விலைக்குரிய பணத் தைக் காயப்பட்டவர் சிகிச்சைக்கென்று தந்துவிடுங் கள்!" என்றாள். "அம்மையே, தாங்கள் உடல் பொருள் ஆவி யெல்லாம் தந்து தேசத்திற்கே உழைக் கிறீர்களே; தங்கள் செல்வமெல்லாம் தந்தீர்கள்; தங் கள் புகழுக்குரிய இப் பதக்கங்களை வைத்துக்கொள் ளுங்கள்; இவற்றை உருக்கக்கூடாது; அதை நினைக் கும்போதே எங்கள் மனம் கலங்குகிறது. உலகில் பட்டம் பதக்கம் பெற ஒவ்வொருவரும் படும்பாடு எவ்வளவு பெரிது! தங்களைத் தேடி வந்த இசைப் பதக்கங்களை உதறி யெறிவாரோ?" என்று பாங்கு அதிகாரிகள் மன்றாடினர். "தேசம் உயிருக்குப் போராடும்போது எனக்குப் பதக்கமென்ன வேண் டும்? இவற்றை நான் தொடுவதுகூடக் கிடையாது. இவை என்கூட வரப்போவதில்லை. இவை சும்மா பெட்டி காத்து உறங்குகின்றன. எனக்குப் பதக்கம் வேண்டா, பொது நலப்பணி யின்பமே வேண்டும்" என்றாள் மேரி! ஆ, அவளைப் போன்ற தியாக வீரம் எத்தனை பேருக்கிருக்கும்! அதனோடு நின்றதா? அவளே தன் கணவர் பியர்கூரி பெயரால் ஒரு ரேடியம் சாலை எற்படுத்தினாள். போர்டோ பாங்கில் தான் வைத்திருந்த ஒரு கிராம் ரேடியத்தையும் எடுத்துக்கொணர்ந்து சிகிச்சைக்குப் பயன்படுத்தி னாள். மேரி அபாயமான குண்டு விழும் இடங்களுக் கெல்லாம் தைரியமாகச் செல்வாள்; நோயாளியைக் காக்க அவள் எவ்வளவு தியாகம் வேண்டுமானாலும்

செய்வாள். அவளிடம் பேச்சு அதிகமிராது; தன்னைப் பற்றி மூச்சு விடமாட்டாள்; பளிச்சென்று தாவிக் குதித்துப் பரோபகாரம் செய்யவே அவள் தன்னைப் பலிதானமாக்கினாள். "உடம்பு ஒரு நாள் விழ வேண்டியதுதானே; அஃது இப்படிப் பரோபகாரத்தால் விழட்டுமே!" என்பாள். வீரர் சிலருக்கு அவள் இன்னாளென்றே தெரியாது; சிலர் சினந்தாலும், படபடப்பாகப் பேசினாலும், அதிகாரம் செய்தாலும், புன்னகையுடன் பொறுத்துக்கொண்டு, தொண்டு செய்வாள். "அதோ, அந்த மெல்லிய, எளிய, இனிய அன்பம்மை, யார்?" என்று கேட்பவர் பலர். சிலருக்கே அவள் ரேடியம் கண்டு இரண்டு தரம் நோபெல் வெகுமதி பெற்ற சூரியம்மை என்று தெரியும். "அம்மா, இவ்வளவு அரிய சேவை செய்யும் தாங்கள் யார்?" என்று சிலர் கேட்டால், "ஜன சேவகி" என்று புன்னகை புரிந்து செல்வாள் கூரி. ரேடியமும் கதிரும் அவள் கையைப் பொசுக்கும்; உடலைப் பாதிக்கும்; நரம்பைத் தளர்த்தும். நோயாளர் பலரைத் தொட்டுச் சிகிச்சை செய்வதும் உடலுக்கு அபாயம். அதிலும் போர்க் களத்தில் உயிரை வெறுத்தே தொண்டு செய்யவேண்டும். "அம்மா, தங்கள் உயிர் உயர்ந்தது; தங்கள் அறிவு எவ்வளவோ சிறந்தது. அபாயத்திற் புகாதீர்கள்!" என்று சிலர் கெஞ்சுவர். அப்போது தன் கணவர் இறந்ததைக் கூரி நினைப்பாள். "உடலுக்கு அபாயமில்லாத நாள் எது? சாகிற உடல், நல்ல சேவையில் போகட்டுமே!" என்று சுருக்கமாகப் பதில் சொல்லி விட்டுத் தன் கடமை காக்க விரைவாள். அங்கம் சிதைந்து இரத்தம் கசியக் கிடக்கும் போர்வீரரைக்

கண்டு மனங்கசிந்துருகி, “ஐயோ, மனித சமுதாயம் எனிப்படி வெறிபிடித்தலேகிறது? போர் ஒழிந்து, உலகெல்லாம் அன்புப் பொறுமையுடன் வாழும் நாள் என்ருே?” என்று உள்ளே நினைப்பாள்.

ஒழிந்தது போர்; ஒலித்தது சமாதான பீரங்கி! கேட்டாள் மேரி கூரி; தனது ஆராய்ச்சிச் சாலேயில் சமாதானக் கொடி பறக்கவிட்டாள். தன்னுடன் சேவை செய்த நண்பரையும் தொண்டரையும் கூட்டித் தனது மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்; அமைதி நாளேக் கொண்டாடினுள். அவள் கொண்டாட்டத்திற்கு மற்ருெரு காரணம் உண்டு; சமாதான உடன்படிக்கைப்படி போலந்து மறுபடி தனியரசானது. ஒழிந்தது ஃஜார் கொடுமை! ரஷ்யாவில் லெனின் நடத்திய போல்ஷ்விக் கிளர்ச்சி வென்றது; ஃஜார் குடும்பமே ஒழிந்தது; தான் இளமை முதல் கண்ட கனவு பலித்தது; சுதேசம் சுதந்தரம் பெற்றது. மேரியின் மனம் மகிழ்வுற்றது! அவள் சேவையும் தியாகமும் கண்டு உலகம் வணக்கமுடன் போற்றியது. புகழ்மொழிகள் வந்து குவிந்தன; பட்டம் பதக்கம் எல்லாம் வந்தன; ஃபிரெஞ்சு தேசம் மறுபடியும் கௌரவப் பட்டமும், வீரப் பதக்கமும் தந்தது. இவற்றையெல்லாம் அவள் ஒரு மூலேயில் ஒதுக்கி விட்டு மேற்கொண்டு நடக்கவேண்டியதைக் கவனித்தாள்.

## 17. அமெரிக்காவில்

போரில் ரேடியக் கதிர் செய்த அற்புத சிகிச்சைகளை உலகம் அறிந்தது. "அம்மையே, ரேடிய சிகிச்சையைப் பற்றித் தாங்கள் ஒரு நூல் எழுத வேண்டும்" என்று அறிவாளர் வேண்டினர். "ரேடியம் வித்தையும், போரும்" (Radiology and the War) என்ற அரிய நூலை மேரிகூரி எழுதி உலகிற்கு அளித்தாள். மேரி, போரை வெறுப்பவள்; மனித சமுதாயம் அன்புடன் ஒற்றுமையாக இரத்தவெறியில்லாமல் வாழ விரும்புகிறவள். அவள் வில்சனின் சர்வதேச சங்கத்தைப் போற்றினள். போர் முடிந்ததும் அவள் தன் மக்களுடன் கொஞ்ச காலம் அமைதியாக நாட்டுப்புறங்களில் வசித்தாள்; சிற்பி சிலை வடிப்பது போல், இருவரையும் எல்லா வகையிலும் பயிற்றி ஆளாக்கினள். ஈரேன், தாய்தந்தையரைப் போலவே பௌதிக இரசாயன கணிதப் புலமை பெற்று ரேடியம் கற்றுச் சிறந்த விஞ்ஞானியானள். ஈவ் இலக்கியப் படித்து, சங்கீதம் பயின்று, அதிற் புலமைபெற்ருள். அவரவர் இயல்பறிந்து நடத்தினள் தாய். இருவரும் தாயிடம் உயிராயிருந்தனர்.

மேரிகூரி, தன் பொருளெல்லாம் தேசத்திற்கே தியாகம் செய்தாள்; அவளுக்கு இருந்தது பௌதிகப் புலவர் அலுவலே. அதில் வந்ததைக் கொண்டே அவள் குடும்பத்தைத் தாங்கி ரேடியச்சாலையும் நடத்தினள். அவள் பணஞ் சேர்த்துப் பூட்டுவதை வெறுத்தாள். ஒருநாள் வில்லியம் மெலோனி என்ற

அமெரிக்கப் பெண்நிருபர் நீண்ட முயற்சியின்பின் கூரியம்மையைப் பேட்டி கண்டு பேசினுள்; கூரியம்மை மிகச் சாதாரணமான கறுப்புடையில் தோன்றினுள்.

நிருபர்: அமெரிக்கா தங்களை வியந்து கொண்டாடுகிறது!

கூரி: அமெரிக்கா சுறுசுறுப்பான நாடு; அது 15 கிராம் ரேடியம் வைத்திருக்கிறது. பால்டிமோரில் 2, தென்வெரில் (Denver) 6, நியூயார்க்கில் 7 கிராம் உள்ளன.

நிருபர்: ஃபிரான்ஸில்?

கூரி: என் ஆராய்ச்சிச்சாலையில் சுமார் ஒரு கிராம் உள்ளது.

நிருபர்: தங்களுக்கு ஒரு கிராம் தானு உள்ளது?

கூரி: எனக்கா? எனக்கு எதுவும் கிடையாது; அந்த ஒரு கிராமும் ஆராய்ச்சிச் சாலைக்குச் சொந்தம். எனக்கு எதுவும் சொந்தமில்லை.

நிருபர்: எனப்படி? எத்தனையோ செல்வர்கள் தங்களுக்கு நிதிக்குவை தரக் காத்திருக்கிருர்கள். ரேடியம் நிரம்பச் செய்தால் ஏராளமான பணம் குவிக்கலாமே!

கூரி: ரேடியத்தால் எவரும் பணங் குவிக்கக் கூடாது; அது, தனி ஒருவருக்கன்று; உலகிற்கெல்லாம் சொந்தம். அதனுல் உலகெல்லாம் பயன்பெற வேண்டும்.

நிருபர்: தாங்கள் கண்டுபிடித்ததைக் கொண்டு தாங்கள் பணங்குவிக்காமல் உலகிற்கெல்லாம் தந்து விட்டீர்களே, பிறகு தங்களுக்கென்று எதைத்தான் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?

கூரி: ரேடியம் ஆராய்ச்சி; அதனுல் அன்புத் தொண்டு—இரண்டே எனக்குப் பிரியமான உடைமைகள்.

வில்லியம் மெலோனி அமெரிக்கா சென்றதும் மேரிகூரியின் தியாக வாழ்வைப் பற்றிப் பிரசாரம் செய்து, பணம் வசூலித்து மேரிகூரிக்கு ஒரு கிராம் ரேடியம் வாங்கி வைத்தாள். அதை ஓயிட் ஹௌஸில் தலைவர் ஹார்டிங் கையால் மேரிகூரிக்குத் தரவேண்டுமென்றே அவளை அமெரிக்கா வருந்தி அழைத்தது. ஜனக்கூட்டமும், தம்பட்டமும் விரும்பாத மேரி முதலில் அழைப்பை மறுத்தாள். அமெரிக்கர் விடவில்லை: "தங்கள் குழந்தைகள் நாங்கள்; குழந்தைகள் அன்புடன் அழைத்தால், தாய் வரவேண்டாமா?" என்று உருக்கமாக முறையிட்டனர். தாய் மனம் இரங்கியது. ஃபிரான்ஸ் பலமான விருந்து வைத்துக் கொண்டாடிப் பட்டமளித்தது. மேரி பட்டத்தை எட்டித் தள்ளி, அறிஞர் அன்புரையை ஏற்று, ஒலிம்பிக் என்ற கப்பலில் அமெரிக்காவுக்குப் புறப்பட்டாள்—27-4-1921. ஈரேன், ஈவ் இருவரும் உற்சாகமாகத் தாயுடன் பிரயாணம் செய்தனர். நியூயார்க் துறைமுகத்தில் எள்போட இடமில்லாமல் கூட்டம்! ஆயிரம் நிழற் படக்கருவிகள் தயாராக நின்றன. மேரிகூரி துறைமுகத்தில் அடிவைத்தாள். வாழ்த்துகள் ஆர்கலித்தன; மலர் மாரி பெய்தது; மாலைகள் குவிந்தன; "மாதாம் கூரி, தயவுசெய்து இப்படிப் பாருங்கள், இப்படி நேரே!" என்று கூவி ஆயிரம் நிழற்படப் பெட்டிகள் 'க்ளிக்' கிட்டன. துறைமுகத்தில் அன்பர் ஓர் அலங்காரக் குரிச்சியில் மேரியை அமர்த்தி வரவேற்றுத் தனி வண்டியில்

அழைத்துச் சென்றனர். எங்கும் வரவேற்பு, பலமான உபசாரம், இனிய விருந்து, இசை முழக்கம்! பத்திரிகைகள் எல்லாம் கூரியம்மை மயமே! ரேடியம் கண்டு பிடித்த மேரிகூரி தனது ரேடியத்தால் பணங்குவித்துத் தடபுடலாக ஆடம்பர உடையணிந்து கம்பீரமாக இருப்பாள் என்று ஜனங்கள் எதிர்பார்த்தனர். மிகவும் சாதாரணமான உடையணிந்து மெலிந்து எளியநடையுடன் கூடிய மேரியைக் கண்டு அமெரிக்கா முழுதும் வியந்தது. "எளிய அழகி" "வழை அறிஞை" "அடக்கமான அற்புதம்" என்றெல்லாம் பத்திரிகைகள் பெரிய தலைப்பிட்டுக் கட்டுரை எழுதின. அமெரிக்க சர்வகலாசாலைகள் அனைத்தும் மேரிக்கு 'டாக்டர்' பட்டமும் பணமுடிப்பும் அளித்து மரியாதை செய்தன. முன்னேற்பாட்டின்படி, நகர்களைப் பார்த்து ஆங்காங்குச் சிறப்புகளைப் பெற்றுக்கொண்டு மேரி கூரி வாஷிங்டன் (Washington) நகரம் வந்தாள். வெண் மாளிகையில் (White House) அமோகமான வரவேற்பு! அமெரிக்கப் புலவரெல்லாம் இம்மாதரசியை வணக்கமுடன் வரவேற்றுப் புகழ்மாலை சூட்டினர். குடியரசுத் தலைவர் ஹார்டிங் (Harding) உபசாரம் கூறி, அமெரிக்காவின் சார்பாக ஒரு கிராம் ரேடியம் கூரியம்மைக்குப் பரிசளித்தார். பரிசுப் பத்திரத்தில், அந்த ரேடியம், "மேரிக்கே உரியது" என்று கண்டிருந்தது. "எனக்கு உரியது பொதுநல சேவை தான். வேறொரு பொருளும் வைத்துக்கொள்ள நான் விரும்பேன். இந்த ரேடியம் எனது ஆராய்ச்சிச் சாலைக்கே உரியது" என்று உடனே ஒரு வக்கீலை அழைத்து மாற்றி எழுதச் செய்தாள்! ரேடியம் செய்யும் இடங்களுக்கெல்லாம் சென்று பார்த்தாள்;

ஸயன்ஸ் சாலைகளைக் கருத்துடன் பார்த்தாள். பெண் சங்கங்கள் அனைத்தும் அவளைக் குதூகலமாக வரவேற்றன. அவளுடைய தியாக புத்தியையும் அறிவின் முதிர்ச்சியையும் போற்றாதவர் இல்லை. அமெரிக்காவின் அபரிமிதமான உபசாரங்களுக்கு மனமார நன்றி செலுத்திக் கப்பலேறினாள் கூரியம்மை.

ஊருக்கு வந்ததும் ஐரோப்பாவிற் சுற்றுப் பிரயாணம் செய்தாள். அச்சமயம் வார்சாவில் அவள் பெயரால் ரேடிய நிலயம் ஏற்பட்டது. அதற்கு அவளே அஸ்திவாரக் கல் நாட்டினாள். தானே அதை நடத்தப் பணமும் வசூலித்துக் கொடுத்தாள். அதற்காக அவள் மறுமுறை அமெரிக்கா சென்றாள். இச் சமயமும் பலமான உபசாரம் நடந்தது. அமெரிக்கச் செல்வர் அவள் பெயரைக் கேட்டதுமே கை நிரம்பப் பவுன்களை அள்ளித் தந்தனர். இந்தச் சமயமே கூரியம்மாள் எடிசனையும் அவரது ஆராய்ச்சிச் சாலையையும் பார்த்தாள். அம்மாதிரியே தன் அருமைக் கணவர் பெயரால் ஓர் ஆராய்ச்சிச்சாலை அமைக்கத் தீவிரமான ஆர்வங்கொண்டு பாரிஸுக்கு வந்தாள்; முதலில் போலந்திற்குச் சென்று தனது நாட்டிற்குப் பயன்படும்படி ரேடிய நிலயத்தை உறுதியாக நிலை நாட்டினாள்; பிறகு பாரிஸுக்கு வந்து அடுத்த வேலையைத் தொடங்கினாள்; ஃபிரெஞ்சு வைத்தியக் கழகம் அவளைக் கௌரவ அங்கத்தினளாகத் தேர்ந்தெடுத்தது. புண்களுக்கு ரேடிய வைத்தியசாலைகள் பல அமெரிக்காவில் இருந்தன. பாரிஸிலும் ஒரு கூரி வைத்தியசாலை நாட்ட அறிஞர் முயன்றனர். பெர்லின் அறிஞர் மேரிகூரியை வரவேற்று மிக்க சிறப்புடன் உபசரித்துப் பரிசளித்தனர்.

## 18. ஆராய்ச்சிச் சாலை

மேரிகூரியின் தீவிரமான ஆசை தன் அருமைக் கணவர் பெயரால் ஆராய்ச்சிச்சாலை அமைத்தலே. இதை யறிந்த அறிஞர் அவளுக்கு வலிய வந்து பொருளுதவி செய்தனர். 1923-ஆம் ஆண்டு ரேடியத்திற்கு இருபத்தைந்தாம் ஆண்டு விழா நடந்தது. அச்சமயம் ஃபிரெஞ்சு சர்க்கார் தேசத்தின் சார்பாக, மேரிகூரி சொந்தத்திற்கென்றே வருஷம் 40,000 ஃபிராங்குகள் தரத் திட்டம்செய்தது. அத்தொகையை மேரிக்குப் பிறகு அவள் சந்ததியும் அனுபவிக்கலாம்.

கூரி ரேடிய நிலயம் பெரிதாக அமைந்தது. அதற்கு ஐரோப்பிய அமெரிக்க நாடுகள் பணமாகவும், கருவிகளாகவும் நல்ல உதவி செய்தன. மேரி அதில் மாணவரை நன்றாகப் பயிற்றினாள். மாணவருக்கு அவளிடம் பெருமதிப்பும் வணக்கமும் உண்டு. அவள் மூளை ஒரு புத்தகசாலை. எந்த நிமிஷம் ஸயன்ஸைப் பற்றி என்ன சந்தேகம் கேட்டாலும் பளிச்சென்று "இஃது இன்னது" என்று சொல்லுவாள்; தன் மாணவன் ஒரு பாடத்தை நிறைவாக அறியுமட்டும் விடமாட்டாள்; அவள் பாடங்களை எளிதாகப் புகட்டுவாள். குறிப்பேடுகளைத் திருத்தும்போது, மாணவரின் இலக்கணப் பிழைகளைக் கூடத் திருத்துவாள்; ஒரு பிழைகூட விழக்கூடாது; எல்லாம் நிறைவாக யிருக்குமட்டும் திருப்பி எழுதச் சொல்லுவாள்; பாடங்களில் மிகவும் கண்டிப்பா யிருப்பாள். "நன்றா யிருக்கிறது—சரியாக எழுதினாய்" என்று மெச்சிப்

புன்னகை புரிவாள்; அரைகுறை வேலையை அவள் ஒப்பமாட்டாள். அவளிடம் படித்த மாணவர்கள் ரேடியம் வித்தையிலும் பௌதிக—ரசாயன சாஸ் திரங்களிலும் பட்டம் பரிசு பெற்றனர்; அரிய கட்டுரைகள் எழுதி வெளியிட்டனர். அவள் ஒரு நாளைக்கு பதினான்கு மணி நேரம் வேலை செய்தாள்; 66-வயதுக் கிழவியாகியும், தன் கடமையில் சுறு சுறுப்பாயிருந்தாள். அவள் அறையில் அரிய நூல் களும் பியர் கூரியின்படமும் இருந்தன. மேஜை நாற் காலிகள் சாதாரணமானவை. மேஜைமேல் மாண வர் விடைத் தாட்களும், பேரறிஞர் கட்டுரைகளும் இருந்தன. மாணவரிடம் எப்பொழுதும் கணக்கு பௌதிகம் இரசாயனம்—இவற்றைக் குறித்தே அவள் பேசினாள்; தன் வேலைகளூடு அடிக்கடி அவள் கணவன் படத்தைப் பார்ப்பாள். அவள் இருந்த தெருவுக்கே, “பியர் கூரி தெரு” என்று பெயர் வந்தது.

ரேடியம் வைத்தியசாலையில் ஆயிரக்கணக்கான பேர் புண்ணாறி, நலமுற்று, மேரியை வாழ்த்தினர். சன்மானந் தந்தனர். தனக்கு வந்த பணத்தை யெல் லாம் அவள் ஆராய்ச்சிச்சாலைக்கும் ஆஸ்பத்திரிக்கும் உடனே தந்து வந்தாள்; இரண்டும் நிலைத்து நடக்க, தகுந்த புலவர்களையும் தேர்ந்த வைத்தியர்களையும் நியமித்தாள்; தன்னிடம் பயின்ற ஒரு மேதாவி மாணவனுக்கே ஈரேனை மணம் செய்து கொடுத்து, இருவரும் பரம்பரையாக ஆராய்ச்சிச்சாலையை கவனித்து வரச் செய்தாள்; ஈரேன் பெற்றுப் பெரு கிப் பெருவாழ்வு வாழ்ந்து, தாயின் பணியைத் தாழ்வற நடத்துகிறாள்!

# 19. இறுதி நாட்கள்

கூரியம்மையார் தாய்நாடு பெருமை பெற்றது; ஃபிரான்சும் பெருமைபெற்றது; பௌதிக உலகமே பெருமை பெற்றது. அவள், தான் கொண்ட விரதங்களை நிறைவேற்றினள். ரேடியம் அவள் உடலைப் பாதித்தது ; அவள் பெயருக்கு அமரத்தன்மை யளித்தது! சர்வகலாசாலைப் புலவர் பீடம் அவளுக்குப் பயனுள்ள வாழ்வைத் தந்தது. அவள் செய்த பொது நலம், உலகின் அன்பைத் தந்தது. பதிபக்தியால் அவள் நிறுவிய கூரி ரேடிய நிலயம், இன்றும் அவளது புனித வாழ்வைப் பேசுகிறது !

வந்த வினை தீர்ந்தது ; இல்லறமும் மக்களால் தழைத்தது ; கன்னி மனைவியாகி, தாயாகிப் பாட்டியுமானள் ! இனி உடலை உதறிச் செல்லவேண்டியது தான் ; உடல் பஞ்சபூதத் தொகுப்பு ; அது பூவிதழ் போல் உதிர வேண்டியதுதான்.

மேரிகூரிக்கு வயது 67 ; கண் பார்வை மங்கிப் போனது ; காதில் "கும்" என்றொரு சத்தம் உண்டானது ; முதுகில் வாயுப்பிடிப்பு உண்டானது. "இனி உடம்பு தாங்காது; போகவேண்டியதுதான்" என்று அவள் அடிக்கடி புலம்பினள். அப்படியிருந்தும் வேலையிற் குறைவில்லை. ஆராய்ச்சிச்சாலையில் இன்னும் விரைந்து வேலை செய்தாள் ; வைத்திய

சாலைகளுக்கு ரேடியம் குழாய்கள் தயாரிப்பதில் கருத் தூன்றினாள். தாதுக்களைச் சுத்தி செய்து சோதித்து அதிகமான ரேடியம் செய்ய ஒரு புதிய தொழிற் சாலை ஏற்படுத்தினாள்; ரேடிய வித்தையைப் பற்றிப் புதிய நூல் எழுதினாள். அவள் இன்னும் ஸைக்கிளில் கிராமங்களுக்குச் சென்று வந்தாள்.

காய்ச்சல் வந்தது; வைத்தியரிடம் சொல்லக்கூட மறுத்து விட்டாள். ஈவ்கூரி கட்டாயப்படுத்தி வைத் தியம் பார்த்தாள். வைத்தியர் பேசாமல் படுத்துக் கொள்ளச் சொன்னார். அதுதான் அவளால் முடி யாது: ஓயாமல்வேலை செய்தாள். ஒருநாள் அவளால் நடக்கமுடியவில்லை; கால் தள்ளாடியது; படுக்கை யாய் விழுந்தாள். மகள் ஈரேன், மாப்பிள்ளை ஃப்ரெ டெரிக் இருவரும் கிட்டவே இருந்தனர். அவர்களிடம் தான் எழுதிய நூலின் அச்சுப் பொறுப்பை விட் டாள். ஆராய்ச்சிச்சாலை நிர்வாகத்தை ஒழுங்கு செய்து, அவர்களிடமும் அறிஞர் சிலரிடமும் ஒப்புவித் தாள்; எல்லாக்காரியங்களையும் ஒழுங்கு செய்தாள்; உடனே வீடு வாசல் ஆராய்ச்சிச்சாலை எல்லாம் விட்டு, மகள் ஈவ் துணைவர, வண்டியேறி ஸெர்வேமுனி வர் ஆரோக்கிய நிலயத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அங்கே வைத்தியர்கள் அவளை அன்புடன் வரவேற் றுச் சிகிச்சை தொடங்கினர்; "மருந்தை விட இந்தச் சுத்தமான காற்றே இனிது;நான் அமைதியாகயிருக்க விடுங்கள்!" என்றாள் கூரி. வைத்தியர்கள் தம்மால் ஆனதைச் செய்துகொண்டு தான் இருந்தனர். மேரி கூரி உள்ளடங்கிப் போனாள்; பேச்சை விட்டாள். மகளைக்கூட நினைக்கவில்லை; ஆராய்ச்சிச்சாலையைக் கூட நினைக்கவில்லை. 4-7-1934; 'ஹா! பேச வாயில்லை'

என்றுள்; நீலவானைப் பார்த்தாள்; கண் மூடி விட்டாள். பிறகு திறக்கவில்லை. திறந்த கூண்டி லிருந்து பறந்த கிளிபோல் உயிர் சென்றது!

டாக்டர் சோதனை நடந்தது. "ரேடியத்தின் காரமான கதிர்கள் தைத்துத் தைத்து, உடம்பைப் பாதித்து விட்டது. ரேடியம் கண்ட மேரி, அதற்கே பலியானுள்" என்றனர் வைத்தியர். செய்தி உடனே உலகெல்லாம் பறந்தது! "ஐயோ, கூரியம்மையை இழந்தோமே!" என்று அறிஞர் வருந்தினர். அண் ணன், தமக்கையர், நண்பர் எல்லாரும் வந்துகூடினர். "எல்லாம் இழந்தோமே" என்று பௌதிகப் புலவர் விசனித்தனர். தாயை யிழந்த சேய்கள் போல் ஆராய்ச்சி மாணவரும், ரேடிய நிலய ஆசிரியரும் விம்மியழுதனர். எட்டுத் திசையிலிருந்தும் அனுதாபத் தந்திகள் வந்து குவிந்தன. ரேடியக் காரம் பட்டு நைந்த கைகளை அறிஞர் கண்ணில் ஒற்றிக் கொண்டனர்.

இனி? மேரிக்கு இனிய பொருள்கள் இரண்டு: ஒன்று, தன் வாழ்க்கைத் துணைவனுகி ரேடியம் காண உதவிய பியர்கூரி; இரண்டு, தான் பிறந்த தாய் நாடான போலந்து. ஆடம்பரத்தை அவள் விரும்புவ தில்லை; ஆதலால் நண்பரும் உறவினரும் அவள் உடலை அமைதியாகச் சவப்பெட்டியில் வைத்துப் பியர்கூரி யின் சமாதைத் திறந்து அதில் அடக்கம் செய்தனர். அண்ணன் ஜோஸெஃபும் தமக்கை புரோனியாவும் தாம் கொண்டுவந்த போலிஷ் மண்ணை மேலே தூவி னர். அது கூரியின் வேண்டுகோள். அறிஞர் மலர் தூவி னர். சவக்குழியை மூடியாயிற்று. அதன்மேல் கல் நட்டு, முன்னே பியர்கூரியின் பெயர் எழுதியிருந்த

னர். இப்போது, "மேரிகூரி ஸ்க்லொடோவ்ஸ்கா : 1876—1934" என்று எழுதினர்.

"அற்புதப் பெண்மணி!" என்று உலகெல்லாம் மேரிகூரியைப் போற்றியது; போற்றுகிறது; என்றும் போற்றும்!

முற்றிற்று.

